ஒன்றாக வாழ்க்கை
நடத்தி வருவதையும் நடைமுறையில் காண்கிறோம்.

இந்தப் ‘பால்’ என்னும் தெய்வம் இன்னாருக்கு இன்னாரென்று பிரித்துக்காட்டியது. அது மட்டுமல்லாமல் உணவிலேயும்கூட இன்னாருக்கு இவ்வளவு என்று பிரித்துக் காட்டியது. கிரேக்க மரபிலேயும் இதுபோல ஒரு தெய்வம் இருந்தது. *Morrea* என்று பெயர். ‘ரித’ என்ற சொல் இதிலிருந்துதான் தோன்றியது. இது வேதகாலத்திலேயே செத்துப்போன ஒரு கடவுள். ‘பால்’ என்னும் தெய்வமும் செத்துப்போய் ரொம்பக் காலமாகி விட்டது. ஆனால் இந்த வழக்கத்தின் எச்சத்தை நாம் மலையடிவாரக் கிராமங்களில் இன்றும் காணலாம்:

**“சாதிப்பாகுபாடு தமிழர்களுடையது; வருணப்பாகுபாடுதான் ஆரியர்களுடையது; சாதி இங்கிருந்துதான் வடநாட்டிற்குச் சென்றது” என்று ஒரு சிலர் கூறுகின்றார்களே, இது குறித்து தங்கள் கருத்தைக் கூறுங்கள்?**

ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். சாதி என்பதற்கு நம்மிடம் ஒரு மாற்றுச்சொல் கிடையாது. இந்தச் சாதி என்ற சொல் வடமொழி வேரான ‘ஜா’ என்றதிலிருந்துதான் தோன்றியது. வடமொழியில் மட்டுமல்ல இந்தோ ஆரியமொழிகள் எல்லாவற்றுக்கும் ‘ஜா’ என்பது பிறப்பைக் குறிக்கிற ஒரு சொல். வனஜா, ஜலஜா என்று வடமொழியில் சொல்வதாக இருந்தாலும் ‘ஜீன்’ என்று விஞ்ஞானக் கலைச்சொல்லாகச் சொல்வதாக இருந்தாலும் சரிதான். இவை அனைத்திலும் இந்தோ ஆரியமொழி வேர்ச்சொல்லான ‘ஜா’ என்னும் சொல் பிறப்பைக் குறிப்பதாகவே உள்ளது. ஜனனம், ஜாதகம் என்ற சொற்கள் எல்லாம் சான்றுகள். தமிழிலே குடி, கணம் ஆகிய சொற்கள்தான் இருக்கின்றன. இச்சொற்கள் இன்றைய சாதிப் பாகுபாடுகளை விளக்கிக்காட்டுமா என்றால் காட்டாது. இன்று சாதி என்று நாம் எதை அர்த்தப்படுத்திக் காட்டுகிறோமோ அதைக் குடி, குலம், கணம் என்ற சொற்கள் அர்த்தப்படுத்திக் காட்டாது. இந்தச் சொற்களை வெவ்வேறு பொருட்களிலே நம்மவர்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள். வருணக்கோட்பாடு ஆரியர்களுடைய குடும்ப நூல்களில்தான் இருந்தது. *Scriptures* இல் தான் இருந்தது. அது ஒருபோதும் நடைமுறையிலே இருந்ததில்லை. நடைமுறையிலே இந்தியாவில் பொதுவாக இருந்ததெல்லாம் மேலாண்மையிலே பார்ப்பன சாதி, பார்ப்பனர்களை அடுத்த ஒரு மேல்சாதி. சாதியப் படிநிலையில் சில இடங்களிலே சத்திரிய சாதியாக (போர்வீரர்

சாதியாக] இருந்தது. சில இடங்களிலே அஃது அல்லாத ஒரு சாதி. இவை அல்லாத ஒடுக்கப்பட்ட சாதி. இந்த நான்கு பெரும் பிரிவுக்குள்ளாக இந்தியாவிலுள்ள எல்லாச் சாதிகளும் அடங்கிவிடும். இதுதான் இந்தியா முழுக்கப் பொதுவிதி. இதிலே நிறைய வேறுபாடுகள் உள்ளன.

வருணத் தத்துவப்படி பார்ப்பன, சத்திரிய, வைசிய, சூத்திரர் இதன்படி பார்ப்பதாக இருந்தால் தமிழ்நாட்டில் பார்ப்பனர்களை அடுத்த மேல்ஜாதியாக வன்னியர்களும் மறவர்களும்
இருந்திருக்க வேண்டும். வேளாளர்கள், சூத்திரர்களாக
இருந்திருக்க வேண்டும். வேளாளர்கள் தங்களைச் சைவ வேளாளர்கள் என்றனர். சிவஞான போதம் இந்த வருணக் கோட்பாட்டை ஒத்துக்கொண்டு சறுக்குகிற இடம் இதுதான். தங்களைச் சூத்திரர்கள் என்று ஒத்துக்கொள்ளவும் அவர்களால் முடியவில்லை; இந்த வருணப் பாகுபாட்டிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ளவும் இயலவில்லை.

எனவே வேளாளர்கள் சத் சூத்திரர்கள்தான்.
சூத்திரர்களில் வேறானவர்கள் அல்ல. அவர்களைவிட வைசியர்கள் உயர்வானவர்கள் என்றால் அந்தச் சாதிக்காரர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால் வருணக்கோட்பாடு ஒருபோதும் வடநாட்டிலும் தென்நாட்டிலும் நடைமுறையில் இருந்ததில்லை. இங்கு சாதி அடுக்குகள்தான் உள்ளன. இந்தச் சாதிகள் வட்டாரம் சார்ந்து தொழில்சார்ந்து, அரசு இயந்திரம் என்னும் நிறுவனத்தின் வளர்ச்சி சார்ந்து வேறுவேறாகக் கிளைத்தன. அரசு இயந்திர வளர்ச்சி அல்லது தொழில் வளர்ச்சி என்பதற்கு எடுத்துக்காட்டு சொல்ல வேண்டும் என்றால் "துடியன் பாணன் பறையன்கடம்பன் என்று இந்நான்கல்லது குடியுமில்லை" என்ற பாடலில் 'பறையன்' என்ற ஒரு குடியைப் பற்றிச் சங்க இலக்கியம் பேசுகிறது.

இன்றைக்குப் 'பறையர்' எனப்படுவோர் பெரும்பாலும் ஒடுக்கப்பட்ட மக்களாகவும் உழுதொழிலாளர்களாகவும் இருக்கின்றனர். நிலமற்ற கூலித்தொழிலாளர்களாக சில இடங்களில் இருக்கின்றனர். அப்படி மட்டும்தான் இருக்கிறார்களா? பெரிய புராணத்தைக் கூர்ந்து கவனித்தால் நந்தனார், பறையர் என்னும் பிரிவைச் சார்ந்தவர். சேக்கிழாரே சொல்வார், "ஊரில் விடும் பறைத்துடைவை உணவுரிமையாக் கொண்டு சார்பில் வரும் தொழில் செய்வார்." எனவே பறைத்தொழில் என்றால் என்ன? இறந்த விலங்குகளினுடைய உடலோடு தொடர்புடைய

தொழில்களைச் செய்ததினாலே நரம்பு சார்ந்த இசைக்கருவிகளைச் செய்தும், தோல் சார்ந்த இசைக் கருவிகளைச் செய்தும் இதன் காரணமாகவே இசையுருவாகி இசைஞானமும் பெற்றவர்கள், சேக்கிழார் கருத்துப்படியே நந்தனார் இசை கற்றவர், “ஆடுதலும் பாடுதலுமாகி வல்லார்” என்றே சொல்கிறார். கோரோசனை எடுத்ததினாலே மருத்துவத் தொழில் செய்பவர். தோலைப் பதப்படுத்துவதற்கு மிக அடிப்படையான சுண்ணாம்புத் தொழில் செய்பவர். அப்படியானால் ஒரு பறையர் என்பவர் மருத்துவத் தொழில் செய்பவர், இசையாளர், இசைக்கருவிகளை ஆக்குபவர், இசைக்கருவிகளைப் பழுது நீக்குபவர், நல்ல நடனக் கலைஞர், சுண்ணாம்பிலே தொழில் செய்பவர், உழுதுதொழில் செய்தவர்.

இன்னொரு விசயம் கேள்விப்பட்டிருப்பீர்கள்; வள்ளுவர் பறையர்; அவர் நெசவுத்தொழில் செய்தவர் என்று. பறையர்களிலே வாதிரியார் என்ற பிரிவினர் இன்னமும் நெசவுத் தொழில் செய்து வருகின்றனர். அப்படியானால் இத்தனை தொழில்களையும் ஒரு சாதி செய்கின்றதென்றால் சமூக உற்பத்திக்கு எவ்வளவு பெரிய பங்களிப்பைச் செய்த சாதியாக அது இருந்திருக்கவேண்டும். அது எப்படி இழிந்த சாதியாகப் போயிற்று? அரசு உருவாக்கத்தின்போது அந்தச் சாதி சார்ந்த தொழில்களையெல்லாம் சுத்த அசுத்தக் கோட்பாட்டைக் கொண்டு இழிவாக்கி அந்தச் சாதியை இழிந்த சாதியாக்கி விட்டனர். தமிழகத்தில் சாதி ஒரு குடிதான். இன்றைக்கும் நெல்லை மாவட்டத்திலே ஒரு சாதியைச் சொல்லி அந்தச் சாதி மக்கள் குடியிருக்கிற தெருக்களைச் சொல்கிறபோது குடி என்றுதான் சொல்கிறார்கள். அது பார்ப்பாரக் குடியிருப்பு, அது வெள்ளாளர் குடியிருப்பு என்றுதான் சொல்கிறார்கள்.
சாதி என்ற சொல்லால் அல்ல.

**வருணாசிரமக் கோட்பாடான பார்ப்பன, சத்திரிய, வைசிய, சூத்திர என்பதற்கும் தொல்காப்பியத்தில் கூறப்பட்டிருக்கும் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற பிரிவிற்கும் உள்ள வேறுபாடு என்ன? முறைவைப்பிலும் மாறுபட்டுள்ளதே?**

அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்று சொல்லக்கூடிய தொல்காப்பிய நூற்பாவை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. தொல்காப்பியத்திலே இடைச்செருகலாகச் செய்யப்பட்ட நிறைய நூற்பாக்களிலே அது ஒரு நூற்பா. ‘வணிகன்’ என்ற சொல் சங்க இலக்கியத்திற்குள்ளே எங்காவது வந்திருக்கிறதா? சங்க இலக்கியப்

புலவர்களின் பயன்மொழியில் ஒரே ஒரு இடத்திலே ‘அறவிலை வாணிகன்’ என்று வந்திருக்கிறது. அந்தச் சொல்லுக்குப் பெருவழக்கு கிடையாது. ஏனென்றால் அச்சொல்லுக்கான வேர்ச்சொல் திராவிட மொழியிலே கிடையாது. வேறு ஒரு சொல் வணிகனைக் குறிக்கத் தமிழ்மொழியில் இல்லை. சங்க இலக்கியத்தில் பெருவழக்குப் பெறவும் இல்லை. தொல்காப்பியத்தில் இருக்கிற நிறைய சொற்கள் சங்க இலக்கியத்தில் இல்லை. ஏனென்றால் அவை இடைச் செருகல்கள், வருணன் என்ற சொல் 2681 சங்க இலக்கியப் பாடல்களிலே ஒன்றில்கூட இல்லையே. பின் எப்படி அந்தத் தொல்காப்பிய நூற்பாவை, அதிகாரப் பூர்வமானதாக எடுத்துக்கொள்ள முடியும்?

**களப்பிரர்கள் அயலவர்கள், களப்பிரர் காலம் இருண்ட காலம் என்று ஒரு பிரிவினராலும், களப்பிரர் காலம் சமணம் முதலிய அவைதிக மதங்கள் எழுச்சியுற்ற காலம் என்று வேறொரு பிரிவினராலும் கூறப்படுகிறதே, அக்காலத் தமிழ்ச்சமூகத்தில் களப்பிரர்கள் உருவாக்கிய தாக்கம் என்ன?**

களப்பிரர்கள் காலம் அவைதிக சமயங்கள் எழுச்சி பெற்ற காலம் என்பதில் எந்தவிதக் கருத்து வேற்றுமையும் கிடையாது. அதுதான் வரலாற்று முடிவு. அவைதிகமதங்கள் எழுச்சியுற்ற காரணத்தினாலே வைதிகமதங்களைச் சேர்ந்தவர்களுக்கு அது இருண்ட காலமாகத்தான் தோன்றும். சங்க இலக்கிய காலத்துக்கும் இந்தக் களப்பிரர்கள் காலத்துக்கும் இடையேயுள்ள வேறுபாடு என்னவென்று கேட்டால் சமூக வளர்ச்சி, உற்பத்தி வளர்ச்சி, நெடுஞ்சாலைப் பெருக்கம், உற்பத்திப் பொருள்களுக்குச் சிறிய அளவிலான சந்தை போன்றவையே. ஏறத்தாழ, ‘அவைதிகம்’ என்று அறியப்பட்ட சமணம், பௌத்த மதங்கள் இரண்டுமே வணிகர்களின் ஆதரவினால் வளர்ந்தவை. தட்சணாவரம் என்று சொல்லக்கூடிய தென்னகப் பெருவீதியைப் பெரிய வழியாக்கியாக்கியது சமணர் கூட்டம்தான். ஆனைமலைக் கல்வெட்டைப் பார்த்தால் உப்பு வாணிகன், கடல் வாணிகன் என்று வணிகர்களின் பெயராகவே இருக்கும். அந்தக் காலத்திலே நிறுவனமதம் போல இருந்த பார்ப்பன மேலாண்மை [அப்பொழுது வைதிக மதங்கள்தான் இருந்தன. சைவ, வைணவ மதங்கள் இல்லை. அவற்றின் குறுவித்துகளைத்தான் அப்பொழுது பார்க்கிறோம்.] வைதிகம் தன்னை முதன்மைப்படுத்திக் கொண்ட காலம்.

வைதிகம் என்று நான் குறிப்பிடுவது கோயில்சாராத, வேதத்தை மட்டும் கொண்டாடுகிற மிகப் பிற்காலத்திலே ‘ஸ்மார்த்தர்கள்’ என்று அறியப்பட்ட பார்ப்பனர்கள் சமூக அரசியல் மேலாண்மையைப் பெற்றிருந்த காலம். “நின் முன்னோர் பார்ப்பார் நோவன செய்யார்” என்றெல்லாம் அரசனைத் தான் உயர்த்திய கைக்குக் கீழே குனிய வைக்கிற அளவுக்கு வல்லமை பெற்றிருந்த காலம். அந்த வல்லமையை சமணமும் பௌத்தமும் சாய்த்துக் காட்டின. வைதிகம் மீண்டும் எழுகிறபோது சைவத்தையும் வைணவத்தையும் உள்வாங்கிக் கொண்ட வைதிகமாக எழமுடியவில்லை. இதன் பின்னாலே சங்கரர் காலத்தில் அது மறுபடியும் தலை தூக்கியது. களப்பிரர் காலத்தைப் பற்றி அறியப் போதுமான கல்வெட்டுச் சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ‘களப்பாளர்கள்’ என்று சில குடும்பங்கள் இங்கே இருந்திருக்கின்றன. களப்பிரர் பிற மொழியாளர்கள் அல்லர். இங்கேயே அவைதிக மதமாக எழுச்சிபெற்ற ஒரு புதிய அரசியல் அதிகாரம் பெற்றவர்கள் என்றுதான் கூறவேண்டும்.

**புனிதம் $X$ தீட்டு, சுத்தம் $X$ அசுத்தம் இந்தக் கோட்பாடு தமிழ்ச் சூழலுக்கு எப்படி வந்தது, இங்கு மதிப்பு | மரியாதை என்பதுதானே மரபு?**

பார்ப்பனியத்தின் உயிர்நாடியான பண்புகளில் ஒன்று இந்த சுத்தம் – அசுத்தம் என்ற கோட்பாடு. இதைப் பிற்கால வைணவம் பார்ப்பனியத்துக்கு எதிராக உடைத்தெறிய முற்பட்டது என்று நானே ஒருமுறை கூறியிருக்கிறேன். இந்தச் சுத்த $X$ அசுத்தக் கோட்பாட்டிலேதான் பார்ப்பனியம் தொக்கி நிற்கிறது.

குழந்தையின் மலம்பட்ட தாயின் உடம்பு அழுக்கானதா? எல்லாப் பெண்ணும் தோட்டிதானே. அழுக்கைக் கொண்டாடுகிற ஒரு கடவுளையே தமிழன் கொண்டிருந்தானல்லவா? அழுக்கை உரமாக்குகிற மூத்ததேவி என்ற கடவுள், அந்தத் தேவியை அழுக்கை உரமாக்குகிற, செல்வத்தின் ஆதாரத்தை உருவாக்கித் தருகிற ஒரு தேவியைச் சுத்த – அசுத்தக் கோட்பாடு என்று கொன்றுவிட்டார்கள். எல்லா அழுக்கும் உரம். உரமெல்லாம் செல்வம். அப்படியானால் அழுக்கெல்லாம் செல்வம். இதுதான் நம் மரபு வழிப் பார்வையாக இருக்க முடியும். ஒரு ஆட்டைப் புதைத்த இடத்திலே ஒரு முருங்கை மரம் நட்டால் அது அப்படிச் செழித்து வளரும் என்று பெருமையோடுதான் சொல்வார்கள். இறைச்சியிலிருந்தும்

எலும்பிலிருந்தும் வளர்ந்த காயென்று அதை ஒதுக்கமாட்டார்கள். அழுக்கு – அசுத்தம் எல்லாம் உடலுழைப்போடு சம்பந்தமில்லாத, ஆனால் உற்பத்தியை ஏதேனும் ஒரு வகையிலே கட்டுப்படுத்த முயல்கிற பார்ப்பனியத்தின் வெளிப்பாடாகும்.

**தமிழ் ஒப்புரவு, எண் 7**
**அக்டோபர் – நவம்பர் 2004**

# காஞ்சி மடமும்
# கைதான மடாதிபதியும்

**காஞ்சி மடம்பற்றி இப்போது என்ன சொல்லத் தோன்றுகிறது?**

காஞ்சி மடமே கடந்த 75 ஆண்டுகளில் பத்திரிகைகள் கட்டி உருவாக்கி எழுப்பிய மணற்கோட்டை; இது சிருங்கேரி மடத்தின் கும்பகோணம் கிளை மடம்தான். பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் இவர்கள் கும்பகோணத்திலிருந்து காஞ்சிக்குக் குடிபோனார்கள், ஆதிசங்கரரே கி.பி.எட்டாம் நூற்றாண்டுக்காரர் என்னும் போது காஞ்சி மடம் 2500 ஆண்டு பழைமை வாய்ந்தது என்பது வாய்கூசாமல் சொல்லும் பொய்யாகும்.

தமிழ்நாட்டில் பெருங்கோயில்களுக்குப் பக்கத்திலே இன்றுவரை சிருங்கேரி மடத்துக்குத்தான் கிளை மடங்கள் உண்டே தவிர, காஞ்சி மடத்துக்குக் கிடையாது. திருநெல்வேலி, மதுரை என எந்த ஊரிலும் இதைப் பார்க்கலாம். அதுதான் 'ஒரிஜினல்' மடம் என்பதாலேயே இந்த நிலை. இந்தக் கிளை மடங்கள் கூட நாயக்கர் ஆட்சிக்காலத்தின் தொடக்கத்தில் வந்தவைதான்.

தமிழ்நாட்டிலுள்ள மற்ற மடங்களுக்கும் காஞ்சி மடத்துக்குமுள்ள முக்கியமான வேறுபாடு என்ன தெரியுமா? இந்த மடத்தின் சகல சடங்குகளிலும் தமிழ் விலக்கப்பட்ட மொழியாகும். மடாதிபதிகளும் [இப்போது வேலூரில் குடிகொண்டிருப்பவரைத் தவிர] தெலுங்கு அல்லது கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்ட பார்ப்பனர்கள்தாம்.

இந்த மடமும் பிராமணர்களில் ஒரு சிறுபிரிவான ஸ்மார்த்தகளுக்கு மட்டுமே உரியதாகும். சிவ பிராமணர்களுக்குக்கூட இங்கே இடம் கிடையாது.

**தமிழ்நாட்டிலுள்ள எல்லாக் கோவில்களுக்கும் தலைமைப் பீடம்போல காஞ்சி மடம் நடந்துகொள்கிறதே. உண்மையில் கோவில்களுக்கும் இந்த மடத்துக்கும் உள்ள தொடர்பு என்ன?**

இவர்களுக்கும் கோவில் வழிபாட்டுக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. காஞ்சி காமாட்சியம்மன் கோவிலை மட்டும் இவர்கள்

வளைத்துக்கொண்டார்கள். அந்தக் கோவிலிலும் அம்மனைத் தொட்டுப் பூசை செய்யும் உரிமை இவர்களுக்குக் கிடையாது. ஆதி சங்கரரின் தத்துவமோ கோவில் வழிபாட்டுக்கு எதிரானது. இவர்கள் பரமாத்தியத்திலே (உயர்ந்த தத்துவ நிலையில் சொல்வதானால்) நாஸ்திகர்கள். அதனால்தான் இவர்கள் திருநீறு பூசிக்கொண்டாலும் யாருக்கும் எடுத்துக்கொடுப்பதில்லை. (திருநீறு என்றுக் கூடச் சொல்லமாட்டார்கள். புஸ்பம் என்றே சொல்வார்கள்.)

காமாட்சியம்மன் கோவில் ஒரு காலத்தில் பௌத்தர்களின் சாராதேவி கோவிலாக இருந்தது என வரலாற்றறிஞர்கள் நிறுவியுள்ளனர். இந்தக் கோவிலுக்குப் பழைய காலத்தில் காமக்கோட்டம் என்று பெயர். அதை வைத்து இவர்கள் காமகோடி என்று பெயர் வைத்துக்கொண்டார்கள். சங்கரர் உருவாக்கிய மடம் என்று கதை கட்டினார்கள்.

**காஞ்சி மடாதிபதி இந்துக்களின் ஏகோபித்த தலைவர், இந்துமதத்தின் லோககுரு என்றெல்லாம் பெருங்குரல் எழுப்பப்படுகிறதே?**

முதலில் இந்து மதம் என்று ஒரு மதமே கிடையாது. எல்லா இந்துக்களுக்கும் இவர் தலைவரும் ஆகமாட்டார். சைவம், வைணவம், சாக்தம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்கிற மாதிரி பலதில் ஒன்று ஸ்மார்த்தம். ஸ்மார்த்தம் என்பது அத்வைதத்தைக் குறிக்கிற சொல். எனவே ஸ்மார்த்தப் பிராமணர்களின் தலைவராக (இந்துக்களின் தலைவராவது அப்புறம்) இவரைச் சொல்ல முடியுமே தவிர ஒட்டு மொத்த பிராமணர்களின் தலைவராகக்கூட இவரைக்கொள்ள முடியாது.

(வைணவக் கோவில்களுக்குள் காஞ்சி மடாதிபதி மூக்கை நுழைப்பதை ஜீயர்கள் வன்மையாக எதிர்த்துள்ளனர்.
எல்லாவற்றையும் மீறி அராஜகமாக எல்லாக் கோவில்களுக்குள்ளும் அத்துமீறுவதை காஞ்சி சாமியார் நடைமுறையாகக் கொண்டுள்ளார்.)

**பிறகெப்படி இந்த மடம் இவ்வளவு செல்வாக்குப் பெற முடிந்தது?**

இவருக்கு முன்னிருந்த சங்கராச்சாரி பெரிய ‘படிப்பாளி.’ இம்மடத்தின் கொள்கையான வர்ணாசிரம தர்மத்தில் அழுத்தமான பிடிப்புக்கொண்டவர். காங்கிரசுக்கு உள்ளேயும் பிராமணரல்லாதோர் குரல் தேசிய இயக்க நாட்களில் ஓங்கி ஒலித்தபோது ராஜாஜி இந்த மடத்துக்கு காந்தியடிகளை அழைத்து வந்துவிட்டார். இச்சந்திப்புக்குப் பிறகுதான் காந்தியடிகள் “நான் வர்ணாசிரமக் கொள்கையில் நம்பிக்கை உள்ளவன்” என்று தமிழ்நாட்டிலிருந்து அறிவிப்புச் செய்துவிட்டுப் போனார்.

அதன்பிறகு வர்ணாசிரமத்தில் நம்பிக்கையுடைய தமிழ்நாட்டுப் பிராமணத் தலைவர்களோடு வடநாட்டுத் தலைவர்களும் வந்து போகிற திருத்தலமாக அது மாறியது. மடத்தின் சொத்துக்களும் பெருக ஆரம்பித்தன.

எழுபத்து மூன்றாண்டுகளுக்கு முன்னால் 1932லேயே ‘குடி அரசு’ இதழில் சங்கராச்சாரியின் பெருகிவரும் செல்வாக்கை எதிர்த்தும் கண்டித்தும் பெரியார் எழுதியிருக்கிறார். பெரியார் தீர்க்கதரிசி என்பதற்கு இதுவும் ஓர் உதாரணம்.

தவிரவும் சங்கர மடத்தின் பிரம்மாண்டம் ஆனந்தவிகடன், பிறகு கலைமகள், கல்கி, இந்து, தினமணி போன்ற இதழ்களால் கட்டி எழுப்பப்பட்ட ஒன்று. பழைய சங்கராச்சாரியரின் உரைகளைக் கலைமகள் ‘தெய்வத்தின் குரல்’ என்றே வெளியிட்டது. கல்கியிலிருந்து சாவிவரை எல்லாரும் சங்கராச்சாரியாரை எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட புனிதராக எழுதிக்காட்டினர்.

[“மற்ற எல்லா மதத்தையும் விட நம்முடைய மதமொன்றே (இந்து மதம்) ஆதிகாலத்திலிருந்து
சிரஞ்சீவியாக இருந்து வருவதற்கும், நம்முடைய நாகரிகமே உலகத்தின் மற்ற நாகரிகங்களைவிட மகோன்னதமாக இருந்து வருவதற்கும் காரணம் மற்ற மதங்களில் இல்லாத இந்த வர்ணதர்மம்தான், (தெய்வத்தின் குரல்; 1021 & 1023ஆம் பக்கம்)

**புதிய புதிய சாமியார்களின் எழுச்சிக்கு அவர்களுக்குப் பின்னால் திரளும் மக்கள் கூட்டம் தான் காரணம்; தமிழ்நாட்டில் பக்தி பெருகிவருகிறதா?**

புதிதாகப் பெருகிவரும் பக்திமான்களைக் கூர்ந்து கவனித்துப் பாருங்கள். இவர்கள் எல்லாரும் அச்சு ஊடகத்துக்கும் தொலைக்காட்சி ஊடகத்துக்கும் பலியாகிப் போனவர்கள். பெரும்பாலும் நகர்ப்புறம் சார்ந்த நடுத்தரக் குடும்பம் சார்ந்தவர்கள். எளிதாகக் கிடைக்கும் பணத்துக்காகவும் உத்தரவாதமான வருமானத்துக்காகவும் கண் நிறையக்
கனவுகளையும் கவலைகளையும் சுமந்து திரிபவர்கள்.

எளிய மக்களுக்கு இந்த வகையான பக்திக் கவர்ச்சி இல்லை. ஐயப்பன் வழிபாடு மட்டும் வாழ்க்கையைத் தொலைத்த எளிய மக்கள் சிலருக்கு ஒரு சின்ன ஒளியாகத் தெரிகிறது. (மார்க்ஸ் சொன்னதுபோல ஆன்மாக்களை இழந்த மக்களின் ஆன்மாவாக) நவீன காலத்து கல்வியைப் போல பக்தியும்

செலவும் பிடிக்கும் விசயமாக மாறிவிட்டது. பிடிபடும் சாமியார்களின் எண்ணிக்கை பெருகப்பெருக இந்த மாயை குறைந்துவிடும்.

ஆனால் உண்மையில் ஆன்மீகம் அல்லது பக்தி என்பது ஆண்டுதோறும் கள்ளும் கறியும் கொண்டு தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும் நாட்டார் தெய்வங்களின் காலடியில் கிடக்கிறது.

அழிந்துபோய் வழிபாடற்றுக்கிடக்கும் கோவில்களெல்லாம் பெருந்தெய்வக் கோவில்கள் அன்றி – சுடலைமாடன், கருப்பசாமி, மாரியம்மா போன்ற நாட்டார் தெய்வக் கோவில்களல்ல. அறநிலையத்துறையும் ஆட்சியதிகாரத்தின் ஆதரவும் நிதி ஒதுக்கீடும் எளிய மக்களின் இந்தப் பக்திக்குத் தேவையில்லை.

**ஜெயேந்திரர் கைது பற்றி . . .?**

சங்கராச்சாரியார் கைது இந்துத்வா சக்திகள் வலுவாகவுள்ள வடமாநிலங்களில் ஏற்படுத்திய சிறு சலசலப்பைக்கூட தமிழ்நாட்டில் ஏற்படுத்தவில்லை. ஏனெனில் இது தமிழையும் தமிழர்களையும் விலக்கிவைத்த மடம் அல்லவா? ஆளும் கட்சியும் எதிர்க்கட்சியும் வேறு எந்த நடவடிக்கையிலும் இவ்வளவு ஒற்றுமையாக இருந்ததில்லை என்பதை நாம் கவனிக்க வேண்டும். வழக்கின் முடிவு எப்படியானாலும் பத்திரிகைகள் உருவாக்கிய சங்கரமடப்புனிதம் நொறுங்கிப்போய்விட்டது. இதுவே உண்மை.

**புனிதம் போச்சு என்றே சொல்லிவிடமுடியுமா?**

இந்த மடத்துக்குச் சென்று வருவதை வாழ்க்கையின் பெரும் பேறாகக் கருதிய அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த முன்னாள் குடியரசுத் தலைவர்கள், அமைச்சர்கள் உட்பட யாருமே
இப்போது வாயே திறக்கவில்லை.

அண்ணா அறிவாலயத்திலிருந்து வெளிவரும் குங்குமம் வார இதழ் சாவி பொறுப்பில் வந்தபோது அதன் முதல் இதழின் அட்டைப்படத்தில் குங்குமம் வைக்கும் பெண்ணின்
பின்புலத்தில் – சுவரில் காஞ்சி சங்கராச்சாரியாரின் படம் இருக்கும்.

இது வேடிக்கைதான். ஓரளவு படித்தவர்கள் வாசிக்கிற ஜூனியர் விகடன் பத்திரிகைகூட இன்னமும் சிறையிலிருக்கும் சங்கராச்சாரியாருக்கும் மடத்திலிருக்கும் இளைய சங்கராச்சாரியாருக்கும் டெலிபதி மூலம் தொடர்பு இருக்கிறது என்று எழுதிக்கொண்டிருப்பது பெரிய வேடிக்கை.

“ஏழாவது வயதிலேயே பெண்ணுக்குத் திருமணம் செய்துவிட வேண்டும். அந்த வயதில் அவனுக்குக் கணவனாக வருகின்றவனிடம் அவள் தன்னை ஒப்படைத்துவிட வேண்டும். அவனையே குருவாகவும் தெய்வமாகவும் ஏற்று அவனுக்குத் தன்னை அர்ப்பணித்துவிட வேண்டும். வயதாகிவிட்டால் பெண் எதிர்க்கேள்வி கேட்பாள். அதனால் இளம்வயதில் அவளை ஒருவனிடம் அர்ப்பணித்துவிட வேண்டும். அதன்பிறகு அவளுக்கென்று எதுவும் இல்லை. [தெய்வத்தின் குரல் பக். 870
$II$ – ஆம் பாகம்.]

❍❍❍

இந்தப் பெரியவாள்தான் மோசம், முந்தின பெரியவாள் அருமை என்று பேசிக்கொண்டிருக்கும் தலைவர்களுக்குச் சமர்ப்பணம்

**நேர்காணல்: ச.தமிழ்ச்செல்வன்கூ ட்டாஞ்சோறு**

# கால்டுவெல் என்ற மனிதர்

**ஏறக்குறைய ஐம்பத்துமூன்று ஆண்டுகள் திருநெல்வேலி வட்டாரத்தில் வாழ்ந்து ஒப்பீட்டு மொழியியல், சமூகவியல், சமயம் எனப் பல்வேறு துறைகளில் சிறந்த பங்களிப்பைச் செய்தவர் கால்டுவெல். ஆய்வாளர் என்ற முறையில் கால்டுவெல் என்ற மனிதர் உங்களை எந்த அளவிற்குக் கவர்ந்துள்ளார்?**

பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் கால்டுவெல் தமிழ்நாட்டில் அதன் தென்கோடிப் பகுதியான இடையன்குடிக்கு வருகிறார். ருச்செந்தூருக்கும் கன்னியாகுமரிக்கும் இடையிலுள்ள கடற்கரைப்பகுதி தமிழ்நாட்டிலேயே மிகமிக வெப்பமான பகுதி. இந்த இடத்தை அவர் தேர்வு செய்ததற்கான காரணம் நமக்குப் புரியவில்லை. ஆனால் இன்றுகூட அந்த ஊரிலே நம்மால் ஒருநாள் இருக்கமுடியாது. அந்த அளவுக்கு வெயிலும் செம்மணல் தேரியினுடைய சூடும் தாங்கமுடியாது. அந்த ஊரிலே இந்த ஐரோப்பியர் 53 ஆண்டுக்காலம் இருந்திருக்கிறார் என்பது என்னைப் பொறுத்த மட்டில் வியப்புக்குரிய ஒன்றாகவே உள்ளது. நான் அந்த ஊருக்குக் கால்டுவெல் நினைவுக் கருத்தரங்கிற்காக மூன்றுமுறை சென்றுள்ளேன். ஆண்டுதோறும் ஜூலையில் கருத்தரங்கை நடத்துகிறார்கள்.

கால்டுவெல் என்ற மிஷனரியைவிட, கால்டுவெல் என்கிற அர்ப்பணிப்பு உணர்வுடைய சமூகச் சீர்திருத்தவாதியைத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். கால்டுவெல் வருகிறபோது, ஏன் இப்ப ஒரு இருபது ஆண்டுகளுக்கு முன்னர் கூட அந்தப் பக்கம் பேருந்து வசதி கிடையாது. தேரிமணல், சாலைகளைக் காற்றிலே மூடிவிடும் என்பதனாலே பனைஓலைகளைப் போட்டு அதன்மீது ஜீப் ஓட்டுவார்கள். இதுதான் போக்குவரத்து வசதி. அப்படியென்றால் பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலே அந்த நிலம் எவ்வாறு இருந்திருக்கும்? கால்டுவெல் குதிரைவண்டியிலும் குதிரையிலும் தான் பயணம் செய்திருக்கிறார். இடையன்குடி என்ற பெயரோடு வழங்கிய சின்னக் கிராமத்தினுடைய செம்மணல் தேரிக்காட்டின் தென்பகுதியை விலைக்கு வாங்கி அதிலே ஒரு தேவாலயத்தைக் கட்டி, பக்கத்திலேயே

தனக்கு ஒரு வீட்டைக்கட்டி, தேவாலயத்தினுடைய வலதுபுறத்திலே, தான் மதம் மாற்றிய அந்த எளிய நாடார் கிறிஸ்தவ மக்களுக்காகத் தெருக்களை, வீடுகளை அமைக்கிறார். அவ்வளவு நேர்த்தியாக,
ஒழுங்காக இன்றளவும் அவை இருக்கின்றன.

காலடுவெல் காலத்திய இடையன்குடி எப்படி இருந்திருக்கும் என்பதற்கு வேறு எடுத்துக்காட்டே தேவையில்லை. இன்றைக்கும் அந்த தேவாலயத்திற்கு நேர் எதிரே இருபது மீட்டர் தாண்டிச் சென்றால் அந்தப் பழைய இடையன்குடி கிராமம் உள்ளது. அதே பழைய ஓலைக்குடிசைகள். பனைமடலால் ஆன வேலிகள். அழுக்கு, வறுமை, வெள்ளாடு இவைகளோடு அப்படியே இருக்கிறது. கால்டுவெல் வருகிறபோதும் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும். கால்டுவெல் நாடார் மக்களிடம் வருகிறபோது அவர்கள் பதநீரை இறக்கிக் கருப்புக்கட்டி உற்பத்தி செய்துகொண்டிருந்தார்கள். அன்றைக்குத் தென்மாவட்டங்களிலேயே இடையன்குடிக்கு ஒரு ஆறு கிலோமீட்டருக்கு முன்னால் உள்ள திசையன்விளை பெரிய
கருப்பட்டிச் சந்தை. அதை நம்பித்தான் அந்த மக்களுடைய வாழ்வாதாரம் இருந்தது.

இன்றைக்கு அந்த மக்கள் கல்வி, சமூக விடுதலை, பாதுகாப்பான வீடு இவற்றோடு நான்காவது தலைமுறையைக் கழித்துக்கொண்டு கால்டுவெல்லைத் தங்களுடைய குலதெய்வமாக, ‘சாஸ்தா’ என்று நாம் சொல்வதைப்போலக் கருதுகிறார்கள். னென்றால் அவர் தந்த வாழ்க்கைதான் இதெல்லாம். ஒரு சுவையான செய்தி. திசையன்விளையைச் சேர்ந்த ஒரு பெரிய தொழிலதிபர் பாளையங்கோட்டையிலே இருக்கிறார், *Bellpins* முதலாளி செல்லத்துரை நாடார், அவர் என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டார். சீர்திருத்தத் திருச்சபைக்காரர்கள் எல்லாம் ஒரு புதிய இடத்தை வாங்கி அதில் ஊரை நிர்மாணிப்பார்கள். அப்படி நிர்மாணிக்கிறபோது அதற்குச் சமாதானபுரம், சுவிசேஷபுரம், கடாட்ஷபுரம், மெய்ஞானபுரம் என்ற மதம் சார்ந்த ஒரு பெயரை இடுவார்கள். வேதாகமம் சார்ந்த பெயர்கள் அவை. ஆனால் கால்டுவெல் இடையன்குடி என்னும் பெயரை ஏன் மாற்றவில்லை என்று கேட்டார். எனக்குத் தெரியவில்லை என்று சொன்னேன் நான். அவர் சொன்னார், “நான் கால்டுவெல் பிறந்த ஊருக்குப் போனேன். அவர் பிறந்த ஊரின் பெயர் *Shepherdyard* . அதாவது தமிழிலே சொல்வதானால் இடையன்குடி. இது தன்னுடைய ஊர்ப்பெயரை நினைவுபடுத்துகிற ஊர் என்பதாலே இந்த ஊர்ப் பெயரை

மட்டும் கால்டுவெல் மாற்றவில்லை,'' என்றார். எனக்கு ரொம்ப வியப்பாக இருந்தது; நெகிழ்ச்சியாகவும் இருந்தது. இவர் தன்னுடைய ஊர்ப்பெயரைக் கொண்ட ஊரை இங்குத் தேர்ந்துகொண்டதாலோ என்னவோ அங்கு 53 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார். இடையிலே ஒரேயொருமுறை மட்டும் இங்கிலாந்து சென்று வந்திருக்கிறார். தன்னுடைய மகளைக்கூட பக்கத்தில் நாகர்கோயிலிலே இருந்த இன்னொரு
மிஷனரியில்தான் திருமணம் செய்து கொடுத்திருக்கிறார்.

இப்பொழுது அங்குக் கால்டுவெல் தனக்காகக் கட்டிய வீடு இருக்கிறது. வீட்டிலே வேறெந்த நினைவுச்சின்னமும் இல்லை.கால்டுவெல் பயன்படுத்திய கோட்ஸ்டாண்டு மட்டும்தான் உள்ளது. தேவாலயத்திலிருந்து அந்த வீட்டிற்கு நடந்து செல்ல நூறு அடிதான். இந்த நூறு அடியையும் அந்த மணலிலே வெயிலிலே நம்மால் நடந்து செல்ல இயலாது. அதற்குப் பின்னாலே கால்டுவெல் மேனிலைப்பள்ளி உள்ளது. கால்டுவெல் மனைவி அந்த ஊர்ப்பெண்களுக்காக உருவாக்கிய ஒரு தையல்பள்ளியின் இடிந்த கட்டடம் இருக்கிறது. இவ்வளவுதான் அங்கு இருக்கிற மிச்சம்.

இந்த தேவாலயம் அவ்வளவு நேர்த்தியாக எண்ணி எண்ணிக் கட்டப்பட்டது. அந்தக் கோபுரமணியினுடைய ஓசை தனியாக இருக்கும். அது கால்டுவெல்லின் தம்பி ஐரோப்பாவிலிருந்து வாங்கி அனுப்பியது என்று சொல்கிறார்கள். இந்தக் கோபுரமணிக்குச் செல்லும் படிக்கட்டுகள் கூட கலைநேர்த்தியுடன் செய்யப்பட்டிருக்கின்றன.
கொடைக்கானலிலே கால்டுவெல் இறந்தாலும் அவர் விருப்பப்படி மூன்று நாட்களாக அந்த உடலைப் பாதுகாத்து மலையிலிருந்து டோலி கட்டிக் கீழே இறக்கி [அன்றைக்கு அதானே சாத்தியம்] அங்கிருந்து ரயிலிலே மதுரை வழியாக திருநெல்வேலி கொண்டுவந்து, அங்கிருந்து பீட்டன் அல்லது சாரட் என்று சொல்லக்கூடிய குதிரை வண்டியிலே பாளையங்கோட்டை தேவாலயத்தில் வைத்துப் பூசைசெய்து, இடையன்குடிக்குக் கொண்டுசென்று அந்தத் தேவாலயத்திலே அடக்கம் செய்திருக்கிறார்கள். அவர் மனைவியும் அங்கேதான்
அடக்கம் செய்யப்பட்டார். பெரிய வியப்பு இதுதான்.

சமூகவிடுதலை, பொருளாதார விடுதலை, சமூக மரியாதை இவைதான் அவர் பெற்றுத் தந்தது. இவற்றை அவர் மதம் மாற்றிய எந்தக் குடும்பமும் இதுவரை இழக்கவில்லை. மாறாகப் பெருக்கிக்கொண்டே இருந்திருக்கிறது. இன்னொரு செய்தி எனக்கே கொஞ்சம் வியப்புதான். நாடார்கள் என்று

பதநீரும் கள்ளும் இறக்கும் தொழில்செய்யும் சாதிக்காரர்களை அவர் மதமாற்றம் செய்தார். அந்த சாதிக்காரர்களை மதம்மாற்றம் செய்வது எந்தப்பிரச்சினைக்கும் வழிவகுக்காது. இன்னொரு சாதியைச் சேர்த்தால் சாதிமோதலுக்கு வழிவகுக்கும் என்று அவர் நினைத்திருக்கலாம். அதனாலேதான் இடையன்குடியிலே தேவாலயத்திற்கு அறுபது மீட்டர் தூரத்திலே வாழக்கூடிய இடையர்கள் இன்றும் கிறிஸ்தவர்களாக ஆகாமல் அப்படியே இருக்கிறார்கள்.

அதுமட்டுமல்லாமல் கால்டுவெல்லைப் பற்றி நிறையக் கதைகள் அந்த ஊரிலே சொல்லப்படுகின்றன. அதிலே முக்கியமான
கதை. கால்டுவெல் ரொம்பக் கோபக்காரராம். தெருக்களில் வீட்டினுடைய ஓர் அறையை அரையடி முன்னால் தள்ளிக் கட்டினால் அங்கிருந்து கூப்பிட்டுச் சாதிப்பெயரைச் சொல்லித் திட்டுவாராம். அதைப் பெருமையோடும், மகிழ்ச்சியோடும் இன்றைக்கும் சொல்கிறார்கள். ஏனென்றால் அவரைத் தங்களுடைய முப்பாட்டன் அல்லது குலதெய்வம் என்று அவர்கள் கருதுவதாலே. சின்ன ஊராக இருந்தாலும். அந்த
ஊரின் முகமே தனி அழகாக இருக்கிறது.

கால்டுவெல் காலத்தில் பயணம் மட்டுமல்ல, மின்சாரம் இல்லை, பேருந்து இல்லை, சாலை வசதி இல்லை. தனக்குக் கோதுமையை வாங்க வேண்டியிருந்தால்கூட கால்டுவெல் தூத்துக்குடிக்கோ பாளையங்கோட்டைக்கோதான் வந்திருக்க வேண்டும். இப்படி சிரமம்மிகுந்த காலத்திலே 53 ஆண்டுகள் ஒரேயொருமுறை இங்கிலாந்து சென்று வந்ததைத் தவிர அந்த ஊரிலே அந்த மனிதர் வாழ்ந்தார் என்பது மகத்தான தியாகம். ஒரு குளிர் நாட்டில் இருந்துவந்து இந்தத் தகிக்கிற வெப்பத்திலே 53 ஆண்டுகள் குடும்பத்தோடு வாழ்ந்திருக்கிறார். தன்னுடைய மகளையும் இங்கேயே திருமணம் செய்து கொடுத்திருக்கிறார். அதனால்தான் சொல்கிறேன். ஒரு மொழியியல் அறிஞர் என்பதை விட அவர் தேர்ந்தெடுத்துக்கொண்ட மக்கள் அன்றைக்குச் சமூக மரியாதையே இல்லாத ஒரு பெரிய மக்கள் கூட்டம்.

ஆனால் இந்த மக்கள் மிகுந்த நன்றியறிவுடையவர்கள் என்பதை அவர் கண்டுகொண்டார். இதனால் அவர்களுக்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் நிறைவு செய்திருக்கிறார். மருத்துவவசதியை எப்படி செய்தார் என்பது பற்றிய எந்தத் தகவலும் எனக்குக் கிடைக்கவில்லை. அதுவரை அவர்கள் பனைஓலைக் குடிசைகளில்தான் வாழ்ந்து

கொண்டிருந்தார்கள். இன்றைக்கு மூன்றாவது, நாலாவது தலைமுறைப் பட்டதாரிகளை இடையன் குடியிலே பார்க்கலாம். இதுதான் நான் அந்த ஊருக்குச் சென்றுவந்த அளவிலே கால்டுவெல்லைப் பற்றித் தெரிந்துகொண்ட செய்திகள்.

**'திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற கால்டுவெல் படைப்பைத்தான் பெரும்பாலும் எல்லாரும் தெரிந்திருக்கிறோம். ஆனால் அவருடைய மற்ற படைப்புகள் – அவற்றின் முக்கியத்துவம் பற்றிச் சொல்லுங்கள்.**

குறிப்பாக *Sanars of Tamilnadu* ன்னு அவர் எழுதின புத்தகம் இருக்கு. *Ethinographic Study* ன்னு நாம இன்றைக்குச் சொல்றோமே . . . முதல்ல விஞ்ஞானப்பூர்வமாகச் செய்யப்பட்ட *Ethinographic Study* அதுதான். அதுலதான் அந்த *Lore* ஐ எல்லாம் அவர் கணக்குல எடுத்துப் பேசுவாரு. அதுல ஒரு கதை. நாடார்கள் ஈழத்துல இருந்து பனங்கொட்டையோட வந்தாங்க அப்படின்றது. நான் அதை ஒரு வரலாற்று உண்மையாகக் கருதுறேன். ஏனென்றால் ஈழம் என்ற சொல்லுக்குத் தமிழில் பனை என்ற பொருள் உண்டு. பனைமீது விதிக்கப்பட்ட வரிக்கு ஈழம்பூச்சி என்றே பெயர். ஈழவர் என்று கேரளாவிலே சொல்லப்படுகின்ற சாதியார் ஈழத்திலிருந்து கேரளாவிற்கு வந்தவர்கள். அதுபோல நெல்லை மாவட்டத்தினுடைய எல்லையோரத்திலே வாழ்கிற இல்லத்துப் பிள்ளைமார் என்று சொல்லப்படக்கூடிய சாதியினரை ஈழப்பிள்ளைமார் என்றுதான் சொல்வார்கள். அவர்களும் அங்கிருந்துதான் வந்திருக்கணும். *Sanars of Tamilnadu* ஓர் அருமையான *Ethimnographic Study* . இன்னுஞ்சொல்லப்போனா கனகசபை பிள்ளை, சீனிவாச ஐயங்கார் இவர்களுக்கெல்லாம் அது முன்னோடி நூலாக இருந்தது என்று நான் கருதுகிறேன்.

***Ethinographic aspect* – லே அவரோட படைப்ப நாம வச்சுப் பார்க்கற ஒரு தேவையும் அதனுடைய முக்கியத்துவமும் உங்களுடைய வார்த்தைகளில் இருந்து புரியுது. இந்தியர்களுக்கு வரலாற்றுப் பார்வை இல்லை என்பதாகக் கால்டுவெல் கருதுகிறார். அதுபோல ஒரு மன்னனைப் பற்றியோ ஒரு நிகழ்ச்சியைப் பற்றியோ உள்ளதை உள்ளவாறே எழுதுவதில் இந்தியர்களுக்கு மிகப்பெரிய சுணக்கம் இருக்கிறது. கவிஞர்களின் கட்டற்ற கற்பனைக்கு இடங்கொடுக்கும் போதுதான் எந்த ஒரு படைப்பும் ஆர்வம் ஊட்டுவதாக அமைகிறதென்று**

**அவர்கள் கருதுவதுபோல் தோன்றுகிறது. புராதனமான இந்திய வரலாறு என்று நாம் சொல்வோமானால் கல்வெட்டுகளிலும் நாணயங்களிலும் காணக்கிடைக்கும். பழமரபுக்கதைகள், புராணங்கள் இப்படி எந்தப் பெயரில் இருந்தாலும் அவை தூக்கியெறியப்பட வேண்டும். அதனால் சிறப்பு எதுவும் இல்லை; மாறாகச் சாதாரணமானதுதான் என்று கால்டுவெல் குறிப்பிடுகிறார். இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்.**

*History of Tinnevelly* – யிலே ஓர் இடத்துல வந்து அவர் எழுதுறாரு, இந்த மக்களுக்கு வரலாற்று உணர்வு கிடையாதுன்னு. *Historic Sense* கிடையாதுன்னு. அது ஒரு அபத்தமான ஸ்டேட்மெண்ட். ஏன்னா கால்டுவெல் காலத்துல கல்வெட்டியல் துறை தொடங்கப்படல. இந்தியாவுல இருக்கிற கல்வெட்டுல 75 விழுக்காடு கல்வெட்டுகள் தமிழ்நாட்டுல. அதுல 75 விழுக்காடு தமிழ்க் கல்வெட்டுகள். அதுல கிட்டத்தட்ட ஒரு 30 ஆயிரம் கல்வெட்டுகள் அச்சிடப்பட்டிருக்கு. இதைத் தெரிந்திருந்தால் கால்டுவெல் அப்படிச் சொல்லியிருக்கமாட்டார். அவர் காலத்துல அதற்கான வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. சுந்தரம்பிள்ளை போன்றவர்களுக்குக் கிடைத்த கல்வெட்டு வாசிக்கிற வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. அவர் வாழ்ந்த நிலப்பகுதியும் அப்படிப்பட்ட பகுதி. இரண்டாவது, அந்த நிலப்பகுதி பார்ப்பனியத் தாக்கம் இருந்த பகுதி அல்ல. இந்த நிலப்பகுதியில் வாழ்பவர்கள் பார்ப்பனிய மேலாண்மைக்கு அடிமைப்பட்டவர்கள் இல்லை. அவர்களெல்லாம் வெள்ளாள மேலாண்மைக்கு அடிமைப்பட்டவர்களாகத்தான் இருந்தார்கள்.

*History of Tinnevelly* புத்தகத்துல ஒரு இடத்துல வரலாறு பற்றி அவர் சொன்ன கருத்தை நீங்க சொன்னீங்க. இந்திய வரலாறு அப்படின்னு ஒண்ணு சொல்லப்போனா அந்த வரலாறுங்கிற அர்த்தத்தைப் பிரதிபலிக்கக்கூடிய ஒரு கருத்துவந்து நம்முடைய நாணயங்கள்லேயும் கல்வெட்டுக்கள்லேயும் தான் இருக்கு. அதற்குப்பிறகு வேறு எதுலயுமே இல்ல அப்படின்னு கருத்து சொல்றாரு. அதேபோல மகாவம்சத்துலதான் இந்த வரலாறோட தன்மை இருக்கு. இலங்கைல இருந்து எழுதப்பட்ட மகாவம்சம்
அது.

கால்டுவெல் காலத்துல எழுத்துமரபுக்கான மரியாதை இருந்தது. இன்றைக்கு இல்லை. இன்றைக்கு நாம வாய்மொழி மரபுக்கான மரியாதை

தருகிறோம். கால்டுவெல் காலத்துல அப்படி ஒரு அறிவுலகம் தோன்றல. அவர் அதையெல்லாம்
கதை என்ற நினைப்புலதான் பதிவு செய்யல.

வழக்கு மொழியிலிருந்துதான் வேர்ச்சொற்களையெல்லாம் திராவிடமொழிகளோட ஒப்பீட்டு நிலைக்கு முக்கியமாகப் பயன்படுத்தறார்.

ஆனா வரலாறு அப்படின்னு பார்க்கும்போது எழுத்துமொழியில அமைந்த வரலாற்றைத்தான் பார்க்கிறார்.

அவர் காலத்து அறிவுலகம் அப்படித்தான் இருந்தது.

இப்ப அதேமாதிரி எதார்த்தத்தை எதார்த்தமாகவே பதிவுபண்றது இந்தியர்களுக்குக் கைவராத கலைன்னும்சொல்றார்.

ஏன் அப்படின்னா, புலவர்கள் அல்லது கவிஞர்கள் ரொம்ப உணர்ச்சி மேலீட்டோட . . . கற்பனைநயம் கலந்து எழுதுவதைத் தான் அவர்களுடைய எழுத்துக்கள்ல பார்க்க முடியுது. ஒரு மன்னனைப் பற்றி நாம குறிப்பிடும்போதுகூட, மிகையாவே எழுதுறாங்க.

கால்டுவெல்லோட குற்றச்சாட்டு உண்மைதான். காரணம் அவர் காலத்துத் தமிழ் உரைநடை வளர்ச்சி பெறல. எல்லா மொழியும் கவிதையாகவே இருந்தது. கணக்கு உட்பட. எனவே இந்த மிகை வேடப்புனைதல் என்பது கவிதைக்குரிய அடிப்படைப் பண்பு. அறிவுக்கான ஊடகம் என்பது கவிதையாக இருந்தபோது இந்த மிகைவேடப்புனைதல் என்பது தவிர்க்கமுடியாத அம்சம்.

அந்த மிகையை வந்து அவர் ஏத்துக்கவே இல்ல. ஒரு இடத்துல அவர் என்ன சொல்றார்; *Poeticalo aspect* – லே எழுதப்பட்ட பனுவல்கள் *popular legends* இதெல்லாம் டிஸ்கார்டு பண்ணனும். அதனால பெரிய இழப்பு எதுவுமே இல்ல அப்படிங்கிறார்.

அவர் காலத்து அறிவுலகச் சூழல் அப்படி. பின்னால வரவர நமக்கு மாறிடுச்சு.

**நேர்காணல்: ஆ. தனஞ்செயன்**
**மாற்றுவெளி, நவம்பர் 2008**

# சாதிகள் உண்மையுமல்ல . . . பொய்மையுமல்ல . . .

தொ.பா.வின் மணிவிழாவினைத் திருநெல்வேலி இலக்கிய நண்பர்கள் அண்மையில் கோலாகலமாகக் கொண்டாடியுள்ளனர். அவரது மணிவிழாவினையொட்டி அவரது வீட்டில் நடந்த சந்திப்பு இது. அவருடன் செலவிடப்படும் ஒவ்வொரு நொடியும் வரலாறு குறித்த மாயையை அகற்றுகிறது. அவருடன் மேற்கொண்ட மிக
இயல்பான உரையாடலிலிருந்து . . .

**கடந்த 30 ஆண்டுகால தமிழ் இலக்கியச் சூழலில் ஒரு மாற்றம் ஏற்பட்டுள்ளது. தலித் கலை இலக்கியச் செயல்பாடுகள், பெண்ணிய விழுமியங்கள் முன்னிறுத்தப்படுதல், வரலாறு குறித்த தெளிவுகள் என மாறிவந்துள்ள இச்சூழலில் நாட்டார் வழக்காற்றியல், தொல்லியல், இனவரைவு ஆய்வுகள் ஆகிய துறைகள் முக்கியப் பங்களிப்பு ஆற்றியுள்ளன. தொல்லியல் ஆவணங்களும் உள்ளூர் வரலாறுகளும் முக்கியத்துவம் பெறும் பண்பாட்டு அடையாளங்களை மீட்டெடுக்கும் காலகட்டமாக இது இருக்கிறது. இதில் உங்களது பங்களிப்பு புதிய ஒளியைப் பாய்ச்சுவதாகக் கருதப்படுகிறது.**

அண்மையில் என்னைப் பற்றிக் குறிப்பிடும் போது, ஐரோப்பிய முறையியலைத் தள்ளி வைத்துவிட்டு எழுதுகிறார் என்று குறிப்பிட்டிருந்தார்கள். அதுதான் நான் எடுத்துக் கொண்டுள்ள முறையியல்; வேறு ஒன்றுமில்லை. கிராமத்துல, கம்மாய்க் கரையிலயோ கோயில் வாசல்லயோ பெரிசுகள் உக்காந்து பேசிக்கொண்டிருக்கும் இல்லையா, அதுதான் என்னோட முறையியல். அதை *all pervasive* என்பார்கள்.

ஒருமணி நேரம் அந்தப் பெரிசுகள் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டாக்க, ஒரு மரத்தப் பத்தி பேசுவாங்க, வாழ்க்கையோட எத்திக்ஸ் பத்தி பேசுவாங்க, வெள்ளைக்காரனப் பத்திப் பேசுவாங்க, நவாப் காலம் பத்திப் பேசுவாங்க . . . சயன்டிபிக்கா பேசுவாங்கன்னு சொல்ல முடியாது. *Lore* என்று சொல்லக்கூடிய வழக்காறுகள் இருக்கு பாருங்க. அவர்கள் வழக்காறுகளில் பல விசயங்களைத் தழுவுகிறார்கள். இந்தப் பல

விசயங்களையும் தழுவிப் பார்க்கிறபோதுதான், எல்லாக் கோணங்களிலும் ஊன்றிப் பார்க்க முடிகிறது.

யூரோப்பியன் சிஸ்டமாலஜி என்னன்னா *Profile* – ம்பான். அதனால ஒரு பக்கப் பார்வை மட்டும்தான் நமக்குக் கிடைக்கும், வரலாறுன்னா எந்த அரசன் எத்தனை வருசம் ஆண்டான்னு. அது அல்ல. அவன் காலத்தில் என்ன நிகழ்ந்தது? முக்கியமான செய்தி என்ன? அவன் எந்தப் பக்கம் ஆட்சி செய்தான்? இதெப் பார்க்கணும்னா *Lore* தான். *Lore* ன்னா வழக்காறுதான். இந்த வழக்காறுக்குள்ள நிறைய விஷயங்கள் புதைஞ்சு கிடக்குது.
அதத் தோண்டித்தான் எடுக்கணும்.

**அதில் புனைவுகளும் சேர்ந்துதானே இருக்கிறது? தரவுகளை எப்படிப் பிரிப்பது?**

இல்லீங்க. அதுல புனைவு இருக்காது. உண்மை புதைஞ்சு போயிருக்கும். அது ரீடிங்கற கணக்குல வராது. ஈசைபர்மெண்ட் அப்படிங்கற கணக்குலதான் வரும். டென்னிஸ் பந்துல
ஒரு கோடு போட்டிருப்பான். அது எங்க தொடங்குது. எங்க முடியுதுன்னு தெரியாது. பிரிக்கிறது பெரிய கஷ்டம்.
அப்படித்தான் பார்க்கணும். இந்த வழக்காறுல உள்ளதுதான் ‘பார்ப்பானுக்கு முந்தி பறையன்’ங்கிறது. அது ஒரு சமூக நிகழ்வுதான். பிராமணர்கள் வருவதற்கு முன் யார் *Priest* ஆக இருந்தாங்கங்கற கேள்விக்கு அது பதில் சொல்லுது. அவர்கள் வருவதற்கு முன் பறையர்கள்தான் *Priest* ஆக இருந்தனர். ‘தம்பி உடையார்’னு ஒரு கட்டுரை எழுதியிருக்கிறேன். எனக்கு ரொம்ப நாளா ஒரு கேள்வி. நான் பரமக்குடியில் இருந்தபோது கீழக்கரை முஸ்லிம்ககிட்ட மட்டும் ஒரு வித்தியாசமான பெயர் வழக்கு இருந்ததக் கவனிச்சிருக்கேன். செய்குத் தம்பி, முகமது தம்பி, சதக்குத் தம்பினு பெயர் வைச்சிருப்பாங்க. இந்தக் கேள்விக்கு
ரொம்ப நாளா எனக்கு விடை கிடைக்கல. திரும்பத் திரும்பத் தோண்டிப் பார்த்தா, சீதக்காதி அப்பா பேரு பெரிய தம்பி மரைக்காயர். யாருக்குப் பெரிய தம்பி? இவர் தம்பின்னா அண்ணன் யாருன்னு வரலாற்று ரீதியாப் பார்த்தா, விஜய ரகுநாத பெரிய தம்பி அவர் பேரு. அப்படின்னா சேதுபதிதம்பி. சேதுபதிக்கு எப்படி தம்பியானாங்கன்னு பாத்தா, போகலூர்ல இருந்த மண் கோட்டைய விட்டுட்டு, இராமநாதபுரத்துல கோட்டை கட்டறதுக்குப் பணம் கொடுத்து கிழக்க அழைச்சிட்டு வந்திருக்காங்க, கீழக்கரை மரைக்காயர்கள்.

இதுக்குப் பதிலா என்ன கேக்கிறாங்கன்னா, கடற்கரையின் மேலாதிக்கத்தக் கேக்குறாங்க. சங்கு வியாபாரம் செய்வது போன்ற உரிமைகள வாங்கிக்கிறாங்க. இப்படி ராஜா, தன்ன நிலைநிறுத்திய தம்பிங்கிறதால தம்பி பட்டம் கொடுக்கிறாங்க. இன்னமும் போட்டுக்கிட்டே வராங்க. இப்படி ஒன்றையொன்று தோண்டித் தோண்டிப் பார்க்கணும். இப்படிப் பார்த்தால் நிறைய விஷயங்கள் தெரியும். நான் இப்படித்தான் பார்த்துக்கிட்டிருக்கிறேன்;
எழுதிக்கிட்டு இருக்கிறேன்.

**இதற்கான கேள்விகள் உங்களுக்கு எங்கிருந்து எழுகின்றன. இது உங்கள் வாசிப்பு சார்ந்தவிஷயமா? அல்லது வேறு ஏதோ தேடல்கள் தொடர்பான விஷயமா?**

வாசிப்பு, மறுவாசிப்பு ரெண்டுந்தான். இதுபோக, இந்த மாதிரி கேள்வி கேட்கிற பழக்கம் எங்கிருந்து வந்ததுன்னா,
மயிலை சீனி. வேங்கடசாமி, ராகவன் பிள்ளை, வானமாமலை மூலம் ஏற்பட்ட பாதிப்புகளிலிருந்து வருது. இந்தக் கேள்விகளுக்கு விடை இல்ல. விடைகளைத் தேடுகிறபோது ஒரு பக்கம் வரலாற்று நிகழ்ச்சிகள்ல விடை இருக்கு. ஒரு பக்கம் வேறு இதுகள்ல
விடை இருக்கும்.

**அடிப்படையில் பெரியாரிஸ்டாக இருக்கிற நீங்கள், எப்படி இதுபோன்ற வாசிப்புகளுக்குள் வந்தீர்கள்?**

ஒன்று வளர்ப்புன்னு சொல்லணும். நான் பிறந்து வளர்ந்த சூழல் இருக்கே அது. சமய நல்லிணக்கம் என்பது பெரியார் படிச்சு எனக்கு வரவில்லை. அது இயல்பாகவே என் வீட்டில் இருந்தது. இந்த ஊர்ல எல்லா இதயும் பார்க்கலாம். சவேரியார் கோயில் திருநாள்ல போயிப் பார்த்தீங்கன்னா, மற்ற மதத்துக்காரங்க கூட்டம் நிறைய இருக்கும். கிறிஸ்துமஸ்ஸுக்குப்
பாலகன் பிறப்புன்னு பிறந்த குழந்தையப் பார்க்கப்போற ஒரு கலாசாரம் இந்த ஊருல இருக்கு. உங்க வீட்டுல புதுசா ஒரு குழந்தை பிறந்திருந்துச்சுன்னா நான் சோப்பு, பவுடர், பால் பவுடர் டின் வாங்கிக்கிட்டுப் பார்க்க வருவது போல எல்லாச் சாதி மக்களும் பாலகன் பிறப்பு குடில் அமைக்கப்பட்டிருக்கிற இடத்துக்குப் போவாங்க. ‘பாலகன் பிறந்துருக்கான் பாருங்க, பாலகன் பிறந்திருக்கான் பாருங்க’ன்னு போவாங்க. இந்தக் கலாசாரம் மத எல்லைகளைத் தாண்டிப் பாய்கிறது.

இந்த மாதிரி சமய நல்லிணக்கம்ங்கிறது, சகிப்புத் தன்மைங்கிறதே ஒரு கெட்ட வார்த்தையாயிட்டுது. இந்தச் சமய நல்லிணக்கம் யாருகிட்ட இயல்பா இருக்குதுன்னா பெண்களிடம் இருக்கிறது. நம்மில் சரிபாதியாகப் பெண்கள் இருக்கிறதாலதான் இங்க மதக் கலவரங்கள் இல்ல. ஒரு குழந்த பிறந்தாலே பார்க்கணும்ங்கிற கலாச்சாரத்துல சாதியோ மதமோ ஆபரேட் ஆகிறதில்ல. இது தமிழ்நாட்டின் தென்பகுதியில் இருக்கு. ஏன்னா தென்பகுதி கல்சுரலா பெரிய சிரமங்களுக்கு ஆளாகாத பகுதி. *Undisturbed* . இந்த மாதிரியான சூழல்ல . . . ஊர், தெரு, வீடு எல்லாமே இயல்பாகவே சமூக நல்லிணக்கத்தப் பேணுகிற, விரும்புகிற சூழல்ல வளர்ந்தது ஒரு முக்கியக் காரணம். அதுல பாளையங்கோட்டைக்கு முக்கியப் பங்கு இருக்கு.

**இந்த மாதிரியான சூழல் தமிழ்நாடு முழுவதும் இல்லையா? இல்லை என்றால் ஏன் இல்லாமப் போச்சு?**

இங்க இருக்கு. தமிழ்நாடு பூரா இருக்கா இல்லையான்னு எனக்குச் சொல்லத் தெரியல. ஏன்னா என்னுடைய களஆய்வுகள் தென் மாவட்டங்களில்தான். *MRT* என்று சொல்லப்படுகிற மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில்தான் இருந்துள்ளது.

**உங்கள் முதல் களஆய்வு மதுரை அழகர்கோயில் பற்றிய கள ஆய்வுதானா?**

ஆமா. அதுல நான் எடுத்துக்கிட்டது வந்து . . . கோயில்னா ஒரு சட்டம் வச்சிருந்தாங்க. *Paradigm* இருந்தது. நான் அத எடுக்கல. ஒரு கோயிலுக்கும் நாலு சாதிகளுக்கும் உள்ள உறவ எடுத்துக்கிட்டேன். சித்திரைத் திருவிழாவில் பார்த்தால், எல்லாச் சாதிகளும் வராங்க. இப்ப, ஆகமம் உள்ள கோயில்கள் இருக்கு; ஆகமங்கள் இல்லாத கோயில்களும் இருக்கு. அடித்தட்டு மக்கள் மத்தியில் ஆகமங்களுக்கு எந்த மரியாதையும் கிடையாது. அப்படிப்பட்ட மக்கள் ஏன் சித்திரைத் திருவிழாவில் கூட்டம் கூடுகிறார்கள் என்பதுதான் நம் கேள்வி. அந்த மக்களான கள்ளர், பறையர், தாழ்த்தப்பட்ட மக்கள் , இடையர் ஆகிய நான்கு சாதிகளுக்கும் அந்தக் கோயிலுக்கும் உள்ள உறவுதான் என் ஆய்வு. அப்படிப் போகும்போது சடங்குகளைப் பற்றிய நம்பிக்கைகள், பழமொழிகள், கல்வெட்டுகள் எல்லாம் பயன்பட்டது.

**மதுரை அழகர் கோயிலிலுள்ள கள்ளழகர் கோயில் போலவே, திருவில்லிப்புத்தூர் அருகே திருவண்ணாமலையிலும் ஒரு கோயில்**

இருக்கிறதே?

அது மதுரை அழகர்கோயிலின் *Replica* . ஒரு ஊரோ கோயிலோ பெரிய அளவுக்கு முக்கியத்துவம் பெறும்போது அது மாதிரி *Replica* க்கள் உருவாகும். டூப்ளிகேட். காசின்னு ஒரு ஊரைப் பார்த்து தென்காசின்னு பேர் வைச்சாங்கள்ல
அத மாதிரி.

**இந்த இரு கோயில்களிலும் சில குறிப்பிடத்தக்க வழிபாட்டு முறைகள்கூட ஒரே மாதிரி உள்ளன?**

வைணவம் நாட்டார் கோயில்களில் நிறைய இருக்கு. அந்த வகையில் மதுரை கள்ளழகர் கோயில்லயும் இங்கேயும் வழிபாட்டு முறைகள் ஒரே மாதிரி இருக்கலாம். தமிழ்நாட்டில் அரசர்கள் வைணவத்தை ஆதரிக்கவில்லை. சோழர்கள் சைவத்தைத் தான் ஆதரித்தார்கள்; வைணவத்தை விரட்டினார்கள். அதையும் மீறி வைணவம் எப்படித் தாக்குப் பிடிச்சுதுன்னா நாட்டார் மக்களாலதான். அதாவது ‘நான் – பிராமின்’ மக்களைக் கோயிலுக்குள் வரவழைச்சது மூலமா வைணவம் தாக்குப் பிடிச்சுது. நாட்டார் மக்களுடன் சமரசம் செய்துகொண்டு வாழத் தொடங்கியது. இது 12, 13ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிறகு. மேலோர் மரபுகள் வறுமைப் படும்போது கீழோர் மரபுகளுடன் எல்லா வகைகளிலும் சமரசம் செய்துகொண்டு மேலும் வாழ்கிறது. இவ்வாறு வைணவம் சிக்கல்பட்டபோது கீழோர் மரபுகளுடன் சைவம் அவ்வாறு செய்யவில்லை. இது தொடர்பாக ‘வைணவம் எவ்வாறு நாட்டார் கூறுகளை வரவு வைத்துக்கொண்டது?’ என ஒரு கட்டுரையும் ‘தென்கலை வைணவத்தில் ஒரு கலகக்
குரல்’ என ஒரு கட்டுரையும் எழுதியுள்ளேன்.

தமிழ்நாட்டில் ராமஅவதாரத்துக்கு மரியாதை
கிடையாது; கிருஷ்ண அவதாரம்தான். இப்ப மதவாத சக்திகள் ராமனைத்தான் கையில் எடுக்குது. ‘ஜெய் ராம்’, ‘ஜெய் ராம்’ங்கிறாங்க. கிருஷ்ணனைக் கையில் எடுக்க மாட்டாஙக. ஏன்னா ராமன்தான் அரச வம்சத்தைச் சேர்ந்தவன்; அரசக் கல்வி கற்றவன்; ஆயுதப் பயிற்சி பெற்றவன்; கையில் ஆயுதம் தாங்கியவன். கிருஷ்ண அவதாரம் பார்த்தீங்கன்னா ஏழைக்குடியில் பிறந்தவன், அழுக்கானவன், திருடுபவன், பொய் சொல்பவன், பெண்களோடு கூடிக் குலாவுபவன். இதற்கு மூலம் பாகவதக் கதைகள். பாகவத மதம்தான் முதலில் உருவாகிறது. அதிலிருந்து

வைணவம் உருவாகிறது. இந்தக் கதைகளைத்தான் ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்கள். ராமனைப் பற்றி அதிகமாகப் பாடியதில்லை. கிருஷ்ணாவதாரத்தின் பாகவதக் கதைகள்தான் ஆழ்வார் பாசுரங்களில் வருகின்றன. குறிப்பாக, பகவத்கீதையைப் பற்றி ஆழ்வார்கள் பேசவே இல்லை என்பது கவனிக்கத்தக்கது. ஒரே ஒருவர் போகிறபோக்கில் குறிப்பாகக் குறிப்பிடுகிறார். அதையும் தேடிக் கண்டுபிடிச்சாதான் உண்டு. அவ்வளவுதான். பகவத்கீதை கொண்டாட்டத்துக்குரிய ஒரு நூல் இல்ல.

**அப்போ 18ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் வந்த சமய சீர்திருத்தவாதிகள் ஏன் வைணவத்தைத் தூக்கிப் பிடிக்கவில்லை?**

ஒன்று, அது மிகவும் சிறுபான்மை நலனாகிப் போச்சு. இன்னொன்று, அதைவிட நேரடியாக ஆங்கிலேய முறையியலைப் பின்பற்றிவிட்டார்கள். பெரியார் உட்பட எல்லோரும் ஐரோப்பிய நாகரிகத்தையே எடுத்துக்கொண்டார்கள்.

**தொல்லியல் கூறுகளை இன்று இடதுசாரிகள் கையாள்கிறார்கள். அவர்கள்அதை எவ்வாறு பார்க்கிறார்கள்?**

இன்னும் சரியாகச் செய்யவில்லை. உதாரணமாகச் ‘சாமியாட்டம்’ என்று ஒரு நாட்டார் கலை இருக்கிறது. ஐரோப்பிய முறையியலைப் படித்தவர்கள், பெரியாரைப் படித்தவர்கள் எல்லாரும் ‘சாமியாட்டம்’ ஒரு காட்டுமிராண்டித்தனம் என்றுதான்
கூறுவார்கள். ஆனா அதைக் கூர்ந்து கவனிச்சா சாமியாட்டம் பழைய போர் நடனத்தின் எச்சப்பாடு என்பது தெரியும். அதாவது ஒவ்வொரு சமூகத்திற்கும் வார் டான்ஸஸ், பாஸ்டரா டான்ஸஸ் என்று உண்டு. தமிழ்ச் சமூகத்தின் வார் டான்ஸின் மிச்ச சொச்சம்தான் சாமியாட்டம். இப்படிப் பார்ப்பதற்கு இன்னும் நாம் பழகலை. சாமியாட்டம் நடந்தாலே விலகி ஓடுவார்கள். சாமியாட்டம் அந்த வட்டார வரலாறுகளோடு தொடர்புடையது. சில இடங்களில் ஆயுதம் தாங்கியிருக்கும்.
சில இடங்களில் அது இல்லாம இருக்கும். ஆயுதம், தாங்கி இருந்தால் அது என்னவகையான ஆயுதம் ? அத எதுக்குப் பயன்படுத்தறாங்கன்னு பார்க்கணும். அப்படி மக்கள் கலாசாரத்தோட தம்மை முழுமையாக அடையாளப்படுத்திக்கொள்ளும் பார்வை இன்னும் இடதுசாரிகளுக்கு வரல்ல. சாமியாட்டம் வார்டான்ஸுன்னே அவங்க நினைக்கல, இல்லயா? அத மாதிரி விளையாட்டுகள். இப்ப பல்லாங்குழி பற்றி ஒரு கட்டுரை எழுதினேன். அதப் படிச்சிட்டு இடதுசாரிகளெல்லாம் தலையில தூக்கிக்

கொண்டாடப் போறாங்கன்னு நினைச்சேன். ஆனா எந்த இடதுசாரியும் அதைப் படிக்கல. அது பிரைவேட் பிராபர்டீஸைக் கலாசார ரீதியாக நியாயப்படுத்துகிற ஒரு விளையாட்டு. உனக்கு ஏழு குழி, எனக்கு ஏழு குழி. குழிக்கு அஞ்சு முத்துகள் என இந்த விளையாட்டு சமத்தன்மையோடு தொடங்குகிறது. மீண்டும் குழிக்கு அஞ்சு முத்துகள் என்ற நிலையே ஏற்படக்கூடாது என்பதுதான் விதி. மேடு பள்ளமாவதும், பள்ளம் மேடாவதும் விளையாட்டு. தோற்றவன் நான் தோற்றுப் போனேன் என்றே நினைக்க மாட்டான். விதி என்னைத் தோற்கடித்துவிட்டது என்றுதான் கூறுவான். நீ என் சொத்தைப் பறித்துக்கொண்டாய் என்று கூறமாட்டான். விதிதான் என் சொத்தை அபகரித்துக்கொண்டது என்றுதான் நினைப்பான். தோற்றுப்போனவன் கடைசியில் கஞ்சி குடிக்கணும். 'கஞ்சி குடி, கஞ்சி குடி' என்பார்கள். தோற்றவனுக்கு அவர்கள் மீது கோபமே வராது. இந்த ஒழுங்குகளைக் கலாசாரரீதியாக உருவாக்குவதுதான் விளையாட்டு. இதை ஒவ்வொரு கட்டமாகப் பிரிச்சு எழுதியிருந்தேன். இதை இடதுசாரிகளால் புரிஞ்சுகொள்ள முடியவில்லை.

**உள்ளூர் வரலாறுகளை எழுதும் முனைப்பு இன்று ஏற்பட்டுள்ளது. அதற்கான ஆதாரங்களை எவ்வாறு தேடுவது?**

அந்த வட்டார நிலவியல், அந்த வட்டார வரலாறு, அந்த வட்டாரத்திலுள்ள நிறுவனங்கள் . . . பாளையங்கோட்டை வரலாற்றை எழுதினால் *Blind School* பத்தி பேசாம இருக்க முடியுமா? 100 ஆண்டுதான் ஆகிறது என்றாலும் தமிழ்நாட்டில் பார்வையற்றவர்களுக்காக உருவாக்கப்பட்ட முதல் பள்ளி . . .
இந்தியாவிலேயே பெரிய பள்ளிக்கூடம். 1903ஆம் ஆண்டில் இந்தியாவிலேயே முதல்முறையாக *Brailey* எழுத்தில் புத்தகம் வெளியிட்டான். இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனத்தப் பத்தி எழுதாம இருக்க முடியுமா? இதுபோன்ற வட்டார நிறுவனங்கள், சடங்குகள், விழாக்கள் இதையெல்லாம் பார்க்க வேண்டியிருக்கு.

**நீங்கள் பாளையங்கோட்டை வரலாறு எழுதுகிறீர்கள் இல்லையா? திருநெல்வேலி, பாளையங்கோட்டை இரண்டும் அடுத்தடுத்த ஊர்கள் என்றாலும் வேறு வேறு அடையாளங்களைக் கொண்டதாகத்தான் எப்போதும் இருந்திருக்கிறதா? அல்லது கிறித்துவத்தின் வருகைக்குப் பின்னர் இந்தத் தனி அடையாளங்களைப் பெற்றதா?**

காலனியஆட்சி வந்த பிறகுதான் தனித் தனியானது. அதுக்கு முன்னாடி ஒன்னாத்தான் இருந்தது. காலனியாட்சி வந்தபிறகுகூட சாதி வேற்றுமைகள் கடுமையாக இருந்தன. [இரண்டு நகரங்களின் அடையாளங்களைப் பிரிக்கும் முக்கிய அம்சமாக இது விளங்கியது.] குறிப்பாக, பிராமண ஆதிக்கம் பின்வாங்கிய பின்னரும் வெள்ளாள சாதி ஆதிக்கம் வந்து சேர்ந்தது. சாதி வேற்றுமையைப் பாதுகாப்பதற்காக வெள்ளாளர்கள் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல.

**வெள்ளாளர்கள் கிறித்துவத்துக்குள்ளும் வந்தார்கள் இல்லையா?**

அங்கயும் போயி எங்க சாதி ஆசாரம் உயர்வானதுன்னு சொல்லிருக்காங்க. அவன் முடியாதுன்னுட்டான். இதனால கிறித்துவத்தில் அவர்கள் நீண்டகாலம் வெற்றியடைய முடியவில்லை. 'வெள்ளாள ஆசாரமும் குருமார் போதகமும்' என்று பாதிக்கப்பட்டவர்கள் ஒரு புத்தகம் எழுதியிருக்காங்க. கிறத்தவனானாலும் வெள்ளாளர்கள் வெள்ளாளர்தான். கோயிலில் நாடார்களுடன் சமமாக உட்கார முடியாதுன்னு சொல்லியிருக்காங்க. கல்லறையும் தனியா கட்டினாங்க. கச்சகட்டி பிள்ளைமார்களுக்கு எனத் தனிக் கல்லறைத் தோட்டம் உருவாக்குனாங்க. இதெல்லாம் நடந்திருக்கு.

**சீர்திருத்தக் கிறித்தவம் வந்த பிறகுதான் இதெல்லாம் மாறியதா?**

18, 19ஆம் நூற்றாண்டுகள்ல தாங்க முடியாத நெருக்கடி இருந்தது. நெல்லை மாவட்டத்துல ஏராளமான நாடார்கள் கிறித்துவத்துக்குப் போறாங்க. இந்த அளவுக்கு வேற எந்த மாவட்டத்துலயும் ஒரு சாதியினர் கிறித்துவத்துக்கோ இஸ்லாத்துக்கோ போனதில்ல. ஏன் போனாங்கன்னா வரலாற்றில் வழக்கமா சொல்கிற பிராமண ஆதிக்கம் இங்க கிடையாது. ஏன்னா இவங்க வாழ்ந்த நிலப்பகுதியில் பிராமணர்களே கிடையாது. வெள்ளாளசாதி ஆதிக்கம்தான் அதிகம் நிலவியது. அத எதுத்துதான் அவங்க போராடுனாங்க. உள்ளூர் வரலாறு எழுதும்போது இதமாதிரி பல தரவுகளுக்கான ஆதாரங்களத் தேடி நாம போகவேண்டியிருக்கு.

**இனவரைவியல் ஆய்வுகள் எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தவை?**

இன்றைக்குச் சாதிகளின் வரலாற்றைப் பத்தி ஆராய்வதுதான் இனவரைவியல் ஆய்வுகள் எனப்படுது. சாதிகள் உண்மையா, பொய்யா என ஆராய்ச்சியாளர்கள்கிட்ட கேட்டா, சாதி உண்மையுமல்ல பொய்யுமல்ல

என்பார்கள். ஏன்னா பரம்பரையா இந்த மண்ணில் வாழ்ந்த மக்கள்தானே எந்த ஒரு சாதியினரும். எனவே மண்ணின் வரலாறு அவங்க சாதிக்குள்ள பாய்ந்திருக்கும், இவங்க வரலாறு மண்ணின் வரலாற்றுக்குள் பாய்ந்திருக்கும், இல்லயா? இதுதான் இனவரைவியல் ஆய்வுகள். ஆராய்ச்சியாளன பொறுத்தமட்டுல, சாதி உண்மையுமல்ல பொய்யுமல்ல.

**ஆனால் தென் அமெரிக்கா போன்ற பகுதிகளில் மேற்கொள்ளப்படும் இனவரைவியல் ஆய்வுகளுக்கும், இங்கு நடைபெறும் இனவரைவியல் ஆய்வுகளுக்கும் இடையே வேறுபாடுகள் உண்டல்லவா?**

ஆமா. சாதி என்பது இந்தியச் சமூகத்துக்கு மட்டும் *Peculiar* ஆனது.

**சாதிகளில் உட்கூறுகளும் இருக்கின்றன . . .**

அடிப்படையா சாதி என்பது உள்வட்டத் திருமணங்களுடைய வரம்பு சார்ந்தது. எதுவரை உங்க சாதி இருக்கும்னா எதுவரைக்கும் நீங்க கலியாணம் பண்ணிக்கலாமோ அது வரைக்கும் உங்க சாதி. அந்தக் காலத்தில பாளையங்கோட்டையில இருந்து சென்னைக்குப் பெண் எடுக்கவோ கொடுக்கவோ முடியாது. ஏன், இங்கிருந்து 20– 30 மைல்கள் தாண்டிக்கூட பெண் எடுத்ததுமில்ல, கொடுத்ததுமில்ல. ஏன்னா ஒரு பொருளாதார
யூனிட்டுங்கறது 10, 15 மைல்களுக்கு உள்ளதான் இருக்கும். எல்லாப் போக்குவரத்தையும் அதுக்கு உள்ளதான் வச்சுக்க முடியும். சாதிகளில் உட்பிரிவுகள் என்பது காலனி ஆட்சிக்கு வெகுகாலத்துக்கு முன்பு உருவாகியிருக்கு. தொழில்ரீதியாக் கீழ போகும்போது அவங்க சாதியிலயே கீழானவங்க ஆகறாங்க. இவ்வாறு ஒரே சாதியில் பல தொழில் பார்ப்பவர்கள் பல உள்சாதிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். உழவுத் தொழில் செய்கிறவர், மருத்துவம் பார்க்கிறவர், பூசாரித் தொழில் பார்க்கிறவர், சுண்ணாம்புத் தொழில் செய்கிறவர், இறந்த மாடுகளைக் கொண்டு டானரி தொழிலில் ஈடுபடுகிறவர் என ஒரே சாதியில் பல உட்பிரிவுகளைப் பார்க்கிறோம் இல்லையா? அதைப் போலத்தான்.

**இதுபோன்ற உழைக்கும் சாதியினருக்கு எழுத்தறிவு என்பது எப்போதும் இருந்தது கிடையாதா?**

எழுத்தறிவு என்பது அதிகாரம் சார்ந்தது இல்லையா? அது கீழ் சாதியினருக்கு அனுமதிக்கப்பட்டதில்லை. நில ஆவணங்கள் சம்பந்தப்பட்ட கணக்கப்பிள்ளைகள் எப்போதும் எழுத்தறிவு பெற்றவர்களாக இருந்துள்ளனர்.

முடியுமா? சிறு தெய்வங்களை, பெரு தெய்வங்கள்போல ஓரளவு தோற்றம்கொள்ள வைக்கலாமே தவிர, அவற்றை முழுமையாகப் பெருந்தெய்வங்களாக மாற்ற முடியாது. ஏனெனில் சிறு தெய்வங்கள் எளிய மக்களின் தெய்வங்கள். அவற்றுக்கான சடங்குகள் எளிய மனிதர்களின் சடங்குகள். அவற்றை முழுமையாக மாற்ற முடியாது என்பதே என் துணிபு.

**ஆனால், மேல் நிலையாக்கம் என்ற ஒன்று தொடர்ந்து நடந்துகொண்டு தானே இருக்கிறது?**

'இருக்கலாம். அதெல்லாம் நாட்டார் மரபை உட்செரிக்கச் செய்யும் பிராமணியத்தின் அர்த்தமற்றப் பிரயத்தனங்கள்; அது தோற்றுப்போகும். பெருந்தெய்வங்களில் பெண் தெய்வத்துக்கு ஆண் தெய்வத்துணை வைக்கப்படுகிறது. அப்படி சிறு தெய்வத்திற்கு வைப்பதில்லை அல்லவா? மாரியம்மன் கையிலிருந்து சூலாயுதத்தை எடுத்துவிட்டால், அது எப்படி அம்மனாக இருக்கும்? எனவே இது ஒரு தற்காலிக நிலை. இந்துத்துவத்தின் தற்காலிக எழுச்சி இது என்றே கருதுகிறேன். நிச்சயம் பிராமணியத்தால், நாட்டார் மரபை ஒன்றும் செய்ய முடியாது.

**சிறு தெய்வங்கள் என்பவை ஒருவகையில் சாதியம் என்ற கோட்பாட்டைத் தக்கவைத்துக்கொள்வதற்கும் பேணுவதற்கும் உதவுகின்றன என்பதை, ஒரு பண்பாட்டு ஆய்வாளராக எப்படிப் பார்க்கிறீர்கள்?**

தேர்தலைவிடவும் சாதியைத் தக்கவைத்துக்கொள்ளும் சமூக ஏற்பாடு இங்கு இருக்கிறதா? அதற்காக அதை நாம் வேண்டாம் எனச் சொல்ல முடியுமா? சாதி என்பது உண்மையும் இல்லை . . . பொய்யும் இல்லை. அதற்கு என ஒரு வரலாற்றுத் தொடர்ச்சி, ஒரு பண்பாட்டுத் தொடர்ச்சி இருக்கிறதுதானே? தெய்வம்தான் சாதியைக் காப்பாற்றுகிறது என்று இல்லை. உண்மையில் சாதிதான் தெய்வத்தைக் காப்பாற்றுகிறதே தவிர, தெய்வம் சாதியைக் காப்பாற்றவில்லை.

**அப்படியென்றால் சாதி ஒழிப்பு என்கிற விஷயம் சாத்தியம் இல்லாத கருத்தியலா?"**

சாதி ஒழிப்பு என்பதை, ஏதோ கொசு ஒழிப்புபோல சுலபமாகப் பேச முடியாது. சாதி என்ற அமைப்பு அவ்வளவு எளிமையானது கிடையாது. சாதியை ஒழிக்க முடியாது. ஆனால் சாதியைக் கரைக்க முடியும். சாம்பாரில்

உப்பைக் கரைப்பது போல. சாதி என்பது தன்னைத்தானே மறுஉற்பத்தி செய்து கொள்ளும். சாதி தோன்றியதற்கு எண்ணற்ற தியரி சொல்ல முடியும், நீங்கள் எந்தக் காரணம் சொன்னாலும் அதில் சிறிது உண்மை இருக்கும். எனவே, இப்படித்தான் இதனால்தான் சாதி தோன்றியது என்பதை முழுமையாகக் கண்டுபிடிக்க முடியவில்லை. அப்படிக் கண்டுபிடிக்க முடியாததாலேயே
அது அழிக்க முடியாததாக இருக்கிறது.

**இந்தச் சாதியக் கட்டுமானத்தை எப்படித் தகர்ப்பது . . . எதைத் தீர்வாக நீங்கள் நினைக்கிறீர்கள்?**

இதைத் தகர்க்க வேண்டுமெனில் அகமண உறவை உடைத்தாக வேண்டும். அதுதான் ஆதாரத் தீர்வு. சொத்துரிமைச் சட்டம் சீர்திருத்தப்பட வேண்டும். தந்தையின் சாதிதான் மகனுக்கு என்பது திருத்தப்பட வேண்டும். சாதிகளை *Re - shuffle*
பண்ண வேண்டும்.

**அப்படி ஒரே நாளில் செய்தால், பெரிய சாதியக் கலவரமாகிவிடுமே?**

ஆமாம். 'சாதிகெட்ட அரசாங்கம்' என்று சொல்லுவான். விருப்பப்பட்ட சாதிப்பட்டத்தைப் பெயருக்குப் பின் போட்டுக் கொள்ள அரசு அனுமதிக்க வேண்டும். இதை ஒரு 'கல்ச்சராக' மாற்ற வேண்டும்.

**இது மேலும் பிரச்சனைகளுக்கு வழிவகுக்காதா?**

ஆமாம், பிரச்சனைகள் அதிகரிக்கும். என்னுடைய நம்பிக்கை இதுதான். சாதிமுறைகளை வரையறை இன்றி முற்றிலுமாகச் சீரழிக்க வேண்டும். எல்லாம் குழம்பட்டும். அப்போதுதான் தெளிவு உண்டாகும்.

இப்படியான இடத்தில்தான் பெரியாரின் தேவை இருக்கிறது. கெட்டிதட்டிப்போன சாதியைக்கூட அசைத்துப்பார்த்ததுதான் பெரியாரின் சாதனை.

நான் சிறுபிள்ளையாக இருக்கும்போது சாதி மறுப்புத் திருமணம் செய்பவர்களுக்கு, வீடு வாடகைக்குத் தர மாட்டார்கள். இப்போது ஓரளவு நிலைமை மாறியிருக்கிறதுதானே? இப்போதும் சென்னை மாதிரியான நகரங்களில் 'வெஜிடேரியன் ஒன்லி'
என டூலெட் போர்டுகள் இருக்கின்றனதான். ஆனால், 'பிராமின்ஸ் ஒன்லி' எனப் போட முடியவில்லை அல்லவா? வெளிப்படையாகச் சாதியை விசாரிப்பது, பேசுவது ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறதுதானே? இதுதான்

பெரியாரின்
பங்களிப்பு.

**பெரியார் சாதியை அசைத்துப்பார்த்தார் என்று சொன்னீர்கள். ஆனால் தற்போது திராவிட இயக்கம் வீழ்ச்சியை நோக்கித்தானே சென்றுகொண்டிருக்கிறது? இப்போதும் திராவிடக் கட்சிகளின் தேவை இருக்கிறது என நினைக்கிறீர்களா?**

திராவிடக் கட்சிகள் நைந்து போய்விட்டன; நீர்த்துப் போய்விட்டன. இவர்கள் அழிந்த பிறகு அங்கிருந்து இனி புதிதாக உருவாகிவருகிற ஓர் இயக்கத்தால்தான் பெரியாரின் கொள்கைகளை மேலெடுத்துப் போக முடியும். பெரியாரின் கொள்கைகளை மேலெடுத்துச் செல்வதற்கான சக்தி இவர்களுக்குக் கிடையாது. ஆனால், பெரியார் கொள்கைகள் ஒருபோதும் சாகாது. மானுட விடுதலை ஒன்றுதான் பெரியாரின் நோக்கம். அதற்கு எதிரான அத்தனை அம்சங்களையும் அவர் எதிர்த்தார். அதனால் யாரெல்லாம் மானுட விடுதலையை முன்னெடுக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் பெரியாரிடம் கற்றுக்கொள்ள விஷயங்கள் உண்டு. அவரின் பல கோட்பாடுகள் அதிரடியானவைதாம். ஆனால் அவை அந்தக் காலத்தின் தேவையால் உருவானவை. அதன் பின்னிருந்த அடிநாதம் என்பது மானுட விடுதலை.

இப்போதுள்ள திராவிட இயக்கங்களையும் திராவிடம் எனும் கருத்தியலையும் போட்டுக் குழப்பிக்கொள்ளக் கூடாது. திராவிடக் கட்சிகள் தோற்றுள்ளன என்பது உண்மையே. என்னைக் கேட்டால் காந்தி, 'காங்கிரஸைக் கலைத்துவிடலாம்' என்று சொன்னதுபோல, 'திராவிட இயக்கங்களைக் கலைத்துவிட்டுப் புது இயக்கங்கள் செய்யலாம்' என்று சொல்வேன்.

**இன்று இந்துத்துவ அறிவுஜீவிகள் அம்பேத்கரைக் கொண்டாடுவதன் மூலமாக உட்செரிக்கப் பார்க்கிறார்கள். சுப்பிரமணியன் சுவாமி போன்றவர்கள் அம்பேத்கரை 'ரிஷி' என வர்ணிக்கிறார்கள். இப்படியான சூழலில் திராவிட இயக்கத்தைக் கலைப்பது என்பது மாதிரியான உரையாடல்கள் சரியாக இருக்குமா?**

இல்லை . . . நான் பெரியார் தேவையில்லை எனச் சொல்லவில்லை. பெரியார் முன்னிலும் அதிகமாகத் தேவை என்கிறேன். எனவே பெரியாரை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தும் இயக்கங்கள் வேண்டும் என்கிறேன். அருண்சோரி போன்ற பார்ப்பனிய அறிவுஜீவிகள், 'ஓர்ஷிப்பிங்

ஃபால்ஸ் காட்' போன்ற நூல்களை எழுதி, அம்பேத்கர் மேல் அவதூறு செய்யப்பார்த்தார்கள். இன்று அவரைக் கொண்டாடுவதன் மூலமாக அவரை அழிக்க முடியும் என நினைக்கிறார்கள். பெரியார், அம்பேத்கர் என்ற கட்டுமானம் பிராமணியத்தின் முன்னிருக்கும் மிகப்பெரிய சவால். அம்பேத்கரை அவர்களால் உட்செரிக்க முடிந்தால்கூட, பெரியாரை ஒருபோதும் அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. ஆகவேதான் அழிக்க வேண்டும் எனத் துடிக்கிறார்கள். பெரியார் – அம்பேத்கர் என்ற பைண்டிங்கில் பெரியாரை உடைப்பது என்ற வேலையையும் செய்துவருகிறார்கள். அம்பேத்கரைப் பெரியாரிடமிருந்து தனிமைப்படுத்தினால், வேலை சுலபம் ஆகும் என நினைக்கிறார்கள். அதற்கு இங்குஉள்ள சில அறிவுஜீவிகள் பலியாகிறார்கள்.

பெரியாரை விமர்சிப்பது ஒரு மோஸ்தர் என்று சில அறிவுஜீவிகள் நினைக்கிறார்கள். அவர்களால் ஒருபோதும் பெரியாரை அழிக்க முடியாது. தலித் மக்கள் பெரியாருடன்தான் இருக்கிறார்கள். தங்களது அடையாளச் சிக்கலுக்காகச் சிலர் இப்படிச் செய்கிறார்கள். ஒருகட்டத்தில் இவர்கள் சோர்ந்து போவார்கள். பெரியாரின் அரசியலில் எதிர்ப்பு இருந்ததே தவிர, வெறுப்பு இருந்ததில்லை. இவர்களிடம் வெறுப்புதான் இருக்கிறது. இந்த அரசியல் மக்களை வென்றெடுக்கப் போதாது.

**ஆனால் பெரியார் வெறுப்பு அரசியல் செய்தார் என்றுதானே ஜெயமோகன் போன்றவர்கள் விமர்சனம் செய்கிறார்கள். கேரளத்தின் நாராயணகுரு போன்றவர்களைச் சொல்லும்போது அவர்கள் வெறுப்பு அரசியலை மேற்கொள்ளாமல் சாத்வீகமான முறையில் பிராமணியத்துடன் போராடித்தான் அதிகாரத்தை வென்றார்கள், திராவிட இயக்கங்கள் வெறுப்பு அரசியல் செய்துதான் முன்வந்தன என விமர்சிக்கப்படுகிறதே?**

இல்லை . . . இது அபாண்டமான பொய். பெரியாரிடம் பிராமணத் துவேஷம் கிடையவே கிடையாது. எதிர்ப்பு மட்டுமே தீவிரமாக இருந்தது. அவருடைய நட்பு வட்டத்திலேயேகூட நிறைய பிராமணர்கள் இருந்தார்கள்தானே? அவர்களிடம் துவேஷமுடன் நடந்துகொள்ளவில்லையே. நாராயண குரு போன்றவர்கள் பணிசெய்த கேரளத்தில்தான் இன்று ஆர்.எஸ்.எஸ். வலிமையாக இருக்கிறது. ஈழவச் சமுதாயத்தினர் முழுக்க இந்துக்களாக மாறிப்போனார்கள். ஆனால் பெரியார் வேலைசெய்த இங்கு ஆர்.எஸ்.எஸ். இன்னும் வலுவடைய

முடியவில்லைதானே? தமிழர்களை முழுமையாக இந்துக்களாக இன்னும் மாற்ற முடியவில்லையே. வெறுப்பு அரசியலால் மக்களை வென்றெடுக்க முடியாது. இன்று ஜெயமோகனும் ரவிக்குமாரும் ஸ்டாலின் ராஜாங்கமும் சில அறிவுஜீவிகளும் செய்துகொண்டிருப்பதுதான் வெறுப்பு அரசியல்.

**பெண்களும் தலித்துகளும் அதிகமாக எழுத வந்திருப்பதை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

நிச்சயமாக வரவேற்கப்படவேண்டிய விஷயம். பெண்கள் நிறையப் பேர் எழுத வந்திருப்பது, குறிப்பாகக் கவிதைத் துறையில் ஏற்பட்டுள்ள எழுச்சி குறிப்பிடத்தக்கது. தலித்துகள் எழுத வந்திருப்பதும் வரவேற்கத்தக்கதே. ஆனால் அவர்கள் பெரியார் மேல் காரணமற்ற வெறுப்புடன் நடந்துகொள்ளத் தேவையில்லை என்றே கருதுகிறேன். பெரியார் முன்வைத்தது மானுட விடுதலை; ஒட்டுமொத்த மானுட விடுதலை எனும்போது அதில் தலித் விடுதலையும் அடக்கம்தான்.

**தற்போது தமிழ்த் தேசியர்களும் பெரியாரை விமர்சிக்கிறார்களே? சீமான் போன்றவர்கள் தொடக்கத்தில் தம்மைப் 'பெரியாரின் மாணவர்கள்' என்றுதான் கூறினர். இப்போது 'முப்பாட்டன் முருகன்' எனச் சொல்லிக்கொண்டு திராவிட இயக்கத்தை சீமான் விமர்சிக்கிறாரே?**

சீமான் எனக்கும் மாணவர்தான் (சிரிக்கிறார்). ஆனால் அவர் தடம்புரண்டுபோனார். முப்பாட்டன் முருகன் எனச் சொன்னால், மற்ற கடவுள்கள் என்ன உறவு எனச் சொல்ல வேண்டுமே? யாரெல்லாம் நம் உறவு இல்லை எனச் சொல்லிவிட்டுத்தானே, யார் நமது உறவு என்று சொல்ல வேண்டும்? ஏன் அவர் அதைச் சொல்வது இல்லை? அவருக்கு அவையெல்லாம் தெரியாது. தத்துவார்த்தத் தெளிவற்ற வெறும் அரசியல் காரணங்கள் அவை. திராவிடம் என்ற கருத்தாக்கம் வேறு; தமிழ்த் தேசியம் வேறு. பெரியார், 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற கோஷத்தை 1938ஆம் ஆண்டிலேயே முன்வைத்தார். தெ.பொ.மீ., சி.பா.ஆதித்தனார், கருமுத்து தியாகராச செட்டியார் போன்றவர்கள் கட்சிகளைக் கடந்து, திருச்சியில் நடந்த அந்தக் கூட்டத்தில் கையெழுத்திட்டார்கள். ஆகவே பெரியார் தமிழ்த் தேசியத்துக்கு எதிரானவரல்ல.

**நீங்கள் தமிழ்த் தேசியம் என்ற கருத்தியலை நம்புகிறீர்களா?**

ஆமாம் . . . நான் தமிழ்த் தேசியம் என்ற கருத்தியலை நம்புகிறேன். நானும் தமிழ்த் தேசியர்தான்.

**அப்படியானால், தமிழ்த் தேசிய மதமாக எது இருக்க முடியும் . . . இங்குள்ள சைவம், வைணவம் போன்ற மார்க்கங்களெல்லாம் ஏற்கெனவே இந்துத்துவத்தால் விழுங்கப்பட்டதாக இருக்கின்றனவே?**

தமிழ்த் தேசியம் இந்து மதத்துடன் போய் இணையாது. இந்து மதம் எல்லாவற்றையும் விழுங்கிவிட்டதென மேலோட்டமாக ஒரு தோற்றத்தை உருவாக்குகிறார்கள். ‘நான் இந்து அல்ல’ என ஒரு நூல் எழுதியுள்ளேன். தமிழ்த் தேசியத்தில் எல்லா மார்க்கங்களுக்கும் இடமுண்டு. இந்து என்ற சொல்லே ஒரு மிஸ்நாமினல். அப்படி ஒரு மதமே கிடையாது. இந்த நிலத்தின்
எந்தப் பழைய நூலிலும் அந்தச் சொல் கிடையாது.

**பெரியார் மத, தேசிய, மொழி அபிமானங்களென எல்லாவற்றையும் நிராகரித்தாரே . . . நீங்கள் ஒரு பெரியாரிஸ்ட். தேசியம் எனும் உரையாடலை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

ஆமாம் . . . பெரியார் எல்லா அபிமானங்களையும் நிராகரித்தார். தமிழைக் ‘காட்டுமிராண்டி பாஷை’ என்றார்; ஒரு கோபத்தில், ஒரு வேகத்தில் இழிசொல்லால் வைவது இல்லையா? அப்படித்தான் அவர் இவற்றையெல்லாம் நிராகரித்தார். அவர் கோபங்கள், ஆதங்கங்கள் நியாயமானவை. அவை ஆழமான மானுட நேசத்திலிருந்து வருபவை.

**இன்றைய சூழலில் தமிழ்ச் சமூகம் உடை, பண்பாடு, கல்வி, மருத்துவம் போன்ற அனைத்திலும் தன் தனித்தன்மையை வேகமாக இழந்துவருகிறேதே?**

பண்பாடு என்பது சிறிய விஷயம் இல்லை. யாராவது சித்தப்பா பெண்ணைத் திருமணம் செய்கிறார்களா . . . இல்லையே? அப்படி சில அடிப்படையான விஷயங்கள் எப்போதுமே எந்தப் பண்பாட்டிலும் மாறாது. மற்றபடி சில விஷயங்கள்
காலத்துக்குத் தகுந்தாற்போல் மாறத்தான் செய்யும். அதில் பெரிதாகத் தவறும் இல்லை. உடையில் தனித்தன்மை வேண்டுமா என்றால், அப்படியொன்றும் பெரிதாக வேண்டாம் என்றே சொல்வேன். பார்ப்பதற்கு நாகரிகமான, மற்றவர்கள் முகம் சுளிக்காத, நமக்கு வசதியான ஓர் உடை

இருந்தால்போதும்.
வேட்டிதான் கட்ட வேண்டும் என அவசியம் இல்லை.

**கல்வி, மருத்துவம் போன்ற துறைகளில்கூட நம் அடையாளத்தை இழக்கிறோமே . . . தமிழே எழுதப் படிக்கத் தெரியாத தலைமுறை ஒன்று உருவாகிவருகிறதே!**

இது மோசமான விஷயம். தமிழ்வழிக் கல்வி தொடர்பாக ஒரு பேரியக்கம் தொடங்கவேண்டிய அவசியமான, அவசரமான காலத்தில் நாம் இருக்கிறோம். ஆனால் அதற்குத் தகுந்த தலைவர்கள் தற்போது நம்மிடம் இல்லையென்பது வருத்தமான
விஷயம்.

**தமிழர்களின் தனி அடையாளம் என்று சொன்னால் எவற்றையெல்லாம் சொல்வீர்கள்?**

நிறையச் சொல்லலாம். குறிப்பாகச் சடங்குகள், சம்பிரதாயங்கள், பழக்க வழக்கங்களில் சொல்லலாம். வேறு எந்தச் சமூகத்தைவிடவும் தமிழ்ச் சமூகத்தில் தாய் மாமன் என்கிற உறவு, ஒரு குடும்பத்தோடு நெருக்கமாகக் கட்டப்பட்டிருக்கிறது. அதுபோலவே இறந்தோருக்குச் செய்யப்படும் சடங்குகளில் தொட்டு வணங்கும் பழக்கம் நம்மிடையே உள்ளது. பிராமணர்கள் சவத்தைத் தொட்டு வணங்க மாட்டார்கள். பொது இடத்தில் பெண்கள் மீதான வன்முறையைத் தடுப்பதைத் தமிழ்ச் சமூகத்தின் தனி அடையாளம் என்று சொல்லலாம்.

**சேர, சோழ, பாண்டியர் எனும் பேரரசு மரபுகள் உருவான காலத்தில்தான் மதங்களும் உருவானதாகச் சொல்லப்படுகிறதே?**

லெனின் ‘ஸ்டேட் அண்ட் ரிலிஜன்’ என ஒரு தியரி சொல்வார். ‘பேரரசும் பெருந்தத்துவமும்’ எனக் கைலாசபதி கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் அவர் அப்படித்தான் சொல்கிறார். சின்னச்சின்ன இனக் குழுக்களைப் பெரிதாகத் திரட்டி, ஒரு பேரரசை உருவாக்கும்போது, பெரிய மதம் ஒன்று தேவைப்படுகிறது. அப்படித்தான் சோழர்களுக்குச் சைவம் தேவைப்பட்டது. பாண்டியர்களுக்குச் சைவமும் ஓரளவு வைணவமும் தேவைப்பட்டன. சமணத்தையும் பௌத்தத்தையும் காலி செய்துவிட்டார்கள்.

**சமணமும் பௌத்தமும் தமிழ்ச் சமூகத்திலிருந்து வெளியேறிய காரணம் என்ன . . . அவை வன்முறையாக அப்புறப்படுத்தப்பட்டனவா?**

சமணர்களைக் கழுவிலேற்றிய கதை உண்மைதான். ஆனால் வட நாட்டில் சமணத்துக்கும் பௌத்தத்துக்கும் நடந்ததைப் போன்ற பெரிய அளவிலான வன்முறைகள் தமிழகத்தில் நடக்கவில்லை. அவற்றின் அழிவுக்கு அவையும் காரணமாக இருந்தன. அளவுக்கு மீறிய துறவு நெறி ஒரு முக்கியமான காரணம். நிலப்பிரபுத்துவச் சமூகம் வலுவாகக் காலூன்றிய பிறகு, ஒரு சம்சாரியால் பின்பற்றவே இயலாத துறவு நெறி அவனுக்குத் தேவையில்லை என்று தோன்றியிருக்க வேண்டும். எனவே தன்னியல்பாக மக்கள் அந்த மதங்களை விட்டு வெளியேறியிருக்க வேண்டும். இன்னொரு காரணம் . . . செல்வம்; அது திரண்டுகொண்டே இருந்தது. செல்வம் ஒரு பக்கம் திரண்டு கொண்டிருக்கையில், துறவு வாழ்வும் செல்வமும் ஒன்றோடொன்று ஒத்திசைந்து செல்ல இயலவில்லை. போலித் துறவிகள் வள்ளுவர் காலத்திலேயே இருந்திருக்கிறார்கள் என்பதற்கு, ‘நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வார்’ என்ற குறளே சாட்சி.

**இன்று தமிழகத்தில் பல்வேறு சாதியினர் தாங்கள் ஆண்ட பரம்பரை எனச் சொல்லிக்கொள்கிறார்களே?**

சுத்தப் பைத்தியக்காரத்தனம் இது. அரசன் சாதி கெட்டவன். பெரும் எண்ணிக்கையிலுள்ள சாதிகள் எப்போதும் அரசனுக்குத் துணையாக இருந்திருக்கும் என்பது உண்மை. அப்படித்துணையாக இருந்த சாதிகளிலிருந்து அரசன் பெண் கொடுத்து பெண் எடுத்திருந்திருப்பான். அதற்காக நாங்கள் அவன் வாரிசு என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆண்ட பரம்பரை எனச் சொல்லாத சாதிகளும் தமிழ்நாட்டில் உள்ளன. உண்மையில் அவர்களுமே கூட வரலாற்றின் ஏதோ ஒரு தருணத்தில், ஏதாவது ஒரு நிலப்பரப்பின் அதிகாரத்தைக் கையில் வைத்திருந்தவர்களாக இருப்பார்கள். எனவே, ‘நாங்க ஆண்ட பரம்பரை’ எனச் சொல்வதில் எந்தத் தனிப்பட்ட பெருமிதமும் இல்லை.

**பெரியாரின் தலைமையில் நடந்த மிகப்பெரிய போராட்டங்களையும் சமூகச் சீர்திருத்தக் கருத்தாக்கங்களையும் தாண்டி இன்று கல்விக்கூடங்களில் சாதியுணர்வுகள் கூர்மையடைந்திருக்கின்றன. இதற்கு என்ன காரணம்?**

சாதி, மண உறவுகளைப் பாதுகாப்பதன் வழியாகத், தன்னைத் தக்கவைத்துக்கொள்கிறது. சமூக வாழ்வில் தோல்வி அடைந்தவர்கள்,

அரசியல் செல்வாக்கு இழந்தவர்கள் சாதியைக் கொண்டு தங்கள் அதிகாரத்தை மீட்க நினைக்கிறார்கள். ஒருவனை நடுராத்திரியில் காவல்துறை வந்து அடித்து இழுத்துச் செல்லுமெனில், அவனை ஜாமீனில் எடுக்க யாரும் முன்வர மாட்டார்கள்; அவனது சாதிக்காரன்தான் வருவான்.

காவல்துறைக்குள்ளும் சாதிய உணர்வுகள் புரையோடிப் போயிருக்கின்றன. ஒருவகையில் சாதிய ஒடுக்குமுறை உணர்வு இல்லாத ஒரு காவல் நிலையம் என்பது இங்கு கிடையாது; அல்லது ஒடுக்குமுறை உணர்வுள்ள காவல்துறை அதிகாரிகள் எல்லா காவல் நிலையங்களிலும் இருக்கிறார்கள். காவல்துறை ஒருதலைப் பட்சமாக செயல்படுவது வாடிக்கையாக இருக்கிறது. ஒருவகையில் பிரச்சனையைப் பெரிதாக்கிவிடுகிறவர்களே அவர்கள்தான். இதனால் காவல் நிலையத்திற்குள்ளே செல்லும் போது இருந்ததைவிட வெளியே வரும்போது அவனது சாதிய உணர்வு ஆழமாகிறது.

கிராமத்தின் வேளாண் கட்டுமானமும் சாதியக் கட்டுமானமும் இன்னும் முழுமையாகச் சிதையவில்லை. ஒடுக்கப்பட்ட மக்கள் கல்வியறிவு பெறும்போது அவர்கள் ஒடுக்குமுறைக்கு எதிரான சிந்தனையுடனும் வாழ்முறையுடனும் வருகிறார்கள். மேல் சாதிக்காரர்களுக்கு இணையாக உண்கிறார்கள், உடுத்துகிறார்கள், பார்களில் உட்காருகிறார்கள். இதை, மேல் சாதிக்காரர்களால் தாங்கிக்கொள்ள முடிவதில்லை. இவன் ஒடுக்க முற்படுகிறான்; அவன் அடங்க மறுக்கிறான். டீக்கடையில் யாரேனும் தவறுதலாக டீயைக் கொட்டிவிட்டாலும் பிரச்சனை வந்துவிடுகிறது. இவ்விடத்தில் ஒடுக்குவதற்கும் ஒடுக்கப்படுவதற்கு எதிராகவும் இருவரும் சாதியச் சங்கங்களை நாடுகிறார்கள். இருவரிடத்திலும் ஆயுதப் புழக்கம் இருக்கிறது. தமிழ்ச் சமூகம் இன்னும் முதிர்ச்சியடையவில்லை என்பதற்கு அடையாளம் இது.

**இன்று எல்லா சமூகத்தைச் சேர்ந்தவர்களும் கல்வியறிவு பெற்று, பல்வேறு அறிவுசார்ந்த பொறுப்புகளுக்கு வந்திருக்கிறார்கள்; பேராசிரியர்களாக இருக்கிறார்கள். ஆனாலும் சாதியை அவர்கள் கைவிடத்தயாராக இல்லையே . . .**

முதலில் இந்தக் கல்வி, கல்வியே அல்ல. இது மருத்துவம் அல்ல, இது கலை அல்ல, இது சினிமா அல்ல, இது அரசியல் அல்ல. எல்லாவற்றிலும் நாம் மாற்றைத் தேடவேண்டிய கட்டாயத்தில்

இருக்கிறோம். மாற்றைத் தேடுகிற முயற்சியை நாம் ஊக்குவிக்க வேண்டும்.

திருநெல்வேலியின் எந்த ஊரின் தெருவுக்குப் போனாலும் அவர்களின் சாதியைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிற வகையில் பெயர்வைத்திருப்பார்கள். ஏதாவது அடையாளங்களை நிறுவி இருப்பார்கள். இதையெல்லாம் சரி செய்யாமல் ஒன்றும் செய்ய முடியாது.

**சென்னையில் பல தெருக்களுக்கு, பல பகுதிகளுக்குச் சூட்டப்பட்டிருந்த சாதிப்பெயர்கள் பெரும்பாலும் நீக்கப்பட்டுவிட்டன அல்லது மாற்றப்பட்டுவிட்டன . . . அதற்கான சட்டமும் கொண்டுவரப்பட்டது. அதைச் செயல்படுத்தலாம் அல்லவா?**

அது ரொம்பக் கஷ்டம். சென்னை போன்ற நகரங்களில் இது சாத்தியப்படலாம். இங்கு அது சாத்தியமில்லை. எனது தெருவிலிருக்கும் பெயரில்கூட சாதி இருக்கிறது. அதை
நீக்க வேண்டும் என்று அரசு சொன்னால், ஊரே எதிராகக் கிளம்பிவிடும்.

**இதை அரசு செய்ய வேண்டும் என்று ஏன் நாம் எதிர்பார்க்க வேண்டும்? இங்குள்ள பெரியோர்கள், சிந்தனையாளர்கள் இத்தகைய விஷயங்களைச் செய்யலாம் அல்லவா?**

பழைய சமூக அமைப்பில், 'பெரிய மனுஷன்' என்ற ஒருவன் இருந்தான். இன்று எந்த ஊரிலும் பெரிய மனுஷன் என்கிற ஒருவனே கிடையாது. நமது கல்விமுறை அப்படியானவர்களை உருவாக்கவில்லையே.

**விகடன் தடம்**

# மொழிக்கல்வியும் மதிப்பீடுகளும்

**மொழிக்கல்விக்குரிய மொழி ஏதாவது உண்டா? இன்னவகையான மொழிதான் பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்று சொல்வது சரியாகுமா?**

மொழிக்கல்வி, குழந்தைமொழியைச் சார்ந்திருப்பது முக்கியம். எது குழந்தைமொழி என்றால் குழந்தை புழங்குகின்ற மொழியெல்லாம் குழந்தை மொழிதான். தகுதி வழக்கு, இயல்பு வழக்கு என்கிற வேறுபாடுபாடுகளைக் குழந்தைகள் புரிந்துகொள்ளாது. அவற்றைக் குழந்தைகள் பெற்றோர்களின் கண்டிப்பின் மூலமாகக் கற்றுக் கொண்டிருக்கின்றனர். அதை எப்போது கற்றுக் கொடுக்க வேண்டுமென்றால், பதினைந்து வயதான பிறகு குழந்தை எந்த மொழியைத் தெரிந்து கொள்ள வேண்டும், எந்த மொழியைத் தெரிந்து கொண்டிருக்கிறது, இரண்டுக்கும் இடையேயான இடைவெளி என்ன, இந்த இடைவெளியை எப்படி இட்டு நிரப்புவது என்பதையெல்லாம் தெரிந்துகொண்ட பிறகு! தகுதி வழக்கு, இயல்பு வழக்கு என்பதன் வேறுபாடுகளைக் குழந்தைகள் புரிந்துகொள்வது எளிதல்ல; அதைப் படிப்படியாகத் தான் செய்யவேண்டும்.

ஆனால் மொழிக்கல்வியைத் திட்டமிடுவோர் இவற்றையெல்லாம் கவனத்தில் கொள்வதில்லை. முதலில் குழந்தைக்கு ஏற்கெனவே வாய்த்துள்ள மொழி அறிவை அவர்கள் கருத்தில்கொள்ள வேண்டும். காரணம், பள்ளிக்கு வரும்போதே குழந்தை பேசத் தெரிந்த குழந்தையாகத்தான் வருகிறது. அதனுடைய மூளைக்குள்ளே சொல் தொகுதிகள் இருக்கின்றன. பள்ளிக்கு வருகிறபோது பிள்ளைகள் அறிந்திருக்கின்ற சொற்களின் அளவு, நகர்ப்புறத்தை விட கிராமப்புறங்களில்அதிகம். கிராமப் புறங்களிலும் கூட வசதியான வீட்டுப்பிள்ளைகளை விட வசதிக் குறைவான வீட்டுப் பிள்ளைகளின் சொல்தொகுதி இன்னும் அதிகமாக இருக்கிறது என்பது நடைமுறை உண்மை. ஆனால் இந்தச் சொல்தொகுதியெல்லாம் இப்போதுள்ள பாடத் திட்டத்திற்குள்ளே வந்துள்ளதா?

மேலும் மொழியைப் பொறுத்தமட்டிலே பள்ளிக்கு வரும் முன்பே பிள்ளைகள், கதை கேட்க ஆரம்பித்துவிடுகிறார்கள்; பாட்டுப் பாட ஆரம்பித்து விடுகிறார்கள்; இதுபோன்ற

குழந்தைகளுக்குச் செய்ய தெரிந்த விசயங்களை வளர்த்தெடுக்கிற முறையிலே நாம் போதித்திருக்கிறோமா? இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். குறிப்பாக, குழந்தைகளுக்கு மிக எளிதாகப் பிடிபடும் இசையுடன் கூடிய மொழியை நாம் பயிற்றுவிப்பதில்லை. எனக்கு ‘அ’ னா கற்றுக்கொடுத்த போது ராகம் போட்டுத்தான் சொல்லித் தந்தார்கள். பன்னிரண்டு உயிர் எழுத்துக்களையும் பாடலாக அவர்கள் கற்றுத் தருகிறபோது அதுவாக வரிசை மாறாது. ஒரு திரைப்படப் பாடலை கற்கிற குழந்தை கிட்டத்தட்ட
அறுபது – எழுபது சொற்கள் அடங்கிய பத்து வரிகளை அப்படியே சொல்கிறது. ஆனால் அனா, ஆவன்னாவைச் சொல்லச் சொன்னால் அது குழம்புகிறது, ஏன்?

இசையோடு அந்த விஷயத்தைக் கற்பிக்க வேண்டும். நம்முடைய மொழிக்கும் இசைக்கும் உரிய முக்கியமான விசயம் என்னவென்று கேட்டால், இந்த மொழியுடைய ஒலித்திரள்கள் இசையோடு கட்டமைக்கப்பட்டவை என்பதே! மூன்று மாத்திரை அளவில் தமிழிலே ஓர் எழுத்தும் கிடையாது. இது இந்த இசைத் தமிழினுடைய அடிப்படை; ‘அ’ ஒரு மாத்திரை ‘ஆ’ வன்னா இரண்டு மாத்திரை
‘ஆ . . .’ என்று நீட்டிச் சொல்லிவிட்டால் அங்கே மொழி
இசைபடுகிறது என்று சொல்கிறார்கள். தமிழ் இலக்கணிகள்
‘ம்ம்ம் . . .’ எனச் சொன்னால் அது இயல் தமிழ் அல்ல, இசைத் தமிழின் கூறு அதில் சேர்ந்துவிடுகிறது என்கிறார்கள்.

மனித உடம்பும் மனித நரம்பும் மனித உயிர்ப்பும் இசையோடு பின்னப்பட்டதனாலேயே இசையில்லாமல் ‘அ, ஆ, இ, ஈ என்று சொல்லிக்கொடுக்கிறபோது ஒலித் திரள்களைப் புரிந்துகொள்ள முடியாத நிலைக்குக் குழந்தைகள் போகின்றனர். அது மட்டுமன்று; உடம்போடும் உயிரோடும் பாரம்பரியமாகவே பின்னப்பட்ட இசை உணர்வையும் அது இழந்து விடுகிறது. இந்த நுட்பமான வேர்களைக் குழந்தைகளின் மனத்திலிருந்து
நாம் அறுத்துவிடுகிறோம்.

நாம் தொடக்கப் பள்ளியில் படித்து இத்தனை
ஆண்டுகளானாலும் அந்தப் பாடங்களை நம்மால் சொல்ல முடியும். அதேபோல எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஐந்தாம் வகுப்பிலே

வியாகப்பன் என்றோர் ஆசிரியர் இருந்தார். முக்கூடற்பள்ளிலே உள்ள பாட்டைச் சொல்லித் தருவார்.

ஆற்றுவெள்ளம் நாளை வரத் தோற்றுதே குறி
மலையாள மின்னல் ஈழ மின்னல் சூழ மின்னுதே
நேற்றும் இன்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே கேணி
நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே.

இந்தப் பாட்டுக்குள்ளே என்ன இருக்கிறது? உங்கள் மண் சார்ந்த குறிப்பாக நெல்லை மண் சார்ந்த [அந்த இலக்கியம் இங்கே பிறந்தது] 'ஈக்கோ சிஸ்டம்' என்ன என்பதைக் கற்றுத் தருகிறது.

சாப்பிடுகிறபோது எப்படி நாம் நம் உயிருக்குத் தேவையான ஒன்றைச் சாப்பிடுகிறோம் என்ற தன்னுணர்வு இல்லாமலே சாப்பிடுகிறோமோ, அதுபோல இந்தப் பாட்டைக் கற்கிறபோது இந்த மண்ணினுடைய 'ஈகோ சிஸ்டம் என்ன, இந்த மண்ணின் பருவ காலம் எப்படி அமையும் என்கிற தன்மைகளையெல்லாமே நாம் அறிந்துகொள்வோம். நாளை மழை வரும் என்றால் இன்றைக்கு 'ஈக்கோ சிஸ்டம்' என்னவாக இருக்கும்? கிணற்றில் தவளை கூப்பிடும். மேலும்

சேற்று நண்டு சேற்றில் வளை ஏற்றடைக்குதே – மழை
தேடியொரு கோடி வானம் பாடி ஆடுதே

என்று வரும்.

இன்றைக்கும் அதுதான். இங்கே பாரம்பரியமான தொழில்நுட்ப அறிவு புதைந்துகிடக்கிறது. அதாவது செய்துசெய்து பழக்கப்பட்டு, மண்ணிலிருந்தும் பிற உயிர்களிலிருந்தும் தாவரங்களிலிருந்தும் நாம் பெறக் கூடியது இந்த அறிவுத் தொகுதி. இது சின்னக் குழந்தைக்கு ஏதேனும் ஒரு வகையில் தரப்படவேண்டும். பாட்டாகவோ விளையாட்டாகவோ
எப்படியோ இது அவர்களைப் போய்ச் சேர வேண்டும்.

**நமது மொழிக்குரிய கூட்டு அனுபவத்தின் சாரத்தைக் குழந்தைகளுக்கு வழங்கவேண்டும் என்று சொல்கிறீர்கள்; அப்படித்தானே?**

ஆமாம். குழந்தைகளின் அனுபவ உலகம் இன்று சுருங்கிக் கொண்டே வருகிறது. இதனை விரிவுபடுத்த பல நிலைகளில் செயல்படவேண்டும். மொழிப்பாடம் வகுப்பறையில் மட்டும் நடைபெறவேண்டியதில்லை.

என்னுடைய மாணவர் வே.சங்கர்ராம் சங்கரன்கோவிலிலே தாய்த்தமிழ்ப் பள்ளி நடத்துகிறார். அந்தப் பள்ளியிலே வகுப்பறையும் விளையாட்டுத்திடலும் மட்டும் கல்விக்குரியனவல்ல. குழந்தைகளைக் கிராமங்களுக்கும் அழைத்துப்போகிறார்கள். ஒருமுறை பயணமாகக் குழந்தைகளை சுமார் பத்து கிலோமீட்டர்வரை வேனில் அழைத்துச் செல்கிறார்கள். ஒரு தடவை போய் வருகின்றபோது, குழந்தைகள் துளசிச்செடியைப் பார்க்கிறார்கள். குத்துச் செடியைப் பார்க்கிறார்கள்; எது புல் என்று தெரிகிறது; எது மேடு என்று
தெரிகிறது; எது வரப்பு என்று தெரிகிறது.

அந்த ஒரு மணிநேர அனுபவத்திலே நிறையச் சொற்களைக் குழந்தைகள் கற்றுக்கொள்கிறார்கள். காரணம், மொழிக்கல்வி என்பது வெறும் ஒலித்திரள்களின் கல்வி அன்று. அது குழந்தைகளின்
அனுபவ உலகம் சார்ந்த விசயம். குழந்தைகளின் அனுபவ உலகம் விரிவுபடும்போது மொழிக்கல்வியும் விரிவடைகிறது.

குழந்தைளின் அனுபவ உலகம் பயணங்களின் போதுதான் மிகப்பெரிய அளவில் விரிவடைகிறது; என்றாலும் வேறு வகைகளிலும் இதைச் செய்யலாம். அடுத்த சமூகத்திலே. அடுத்த பொருளாதாரத் தளத்திலேயுள்ள குழந்தைகளுடன் உறவாடச் செய்வதன் மூலம் குழந்தையின் அனுபவ உலகம் ஆழமடையும். சென்னை நகரத்துக் குழந்தைகள், சங்கரன்கோவில் குழந்தைகளோடு இரண்டு ஆட்டம் கபடி ஆடினால் சில புதுச் சொற்களைக் கற்றுக்கொள்வார்கள்.

**நடைமுறையில் இது சாத்தியப்படுமா என்பதையும் நாம் ஆராய வேண்டும்.**

வட்டார வேறுபாடுகளோடு சேர்ந்த ஒரு மொழிக்கல்வியின் மூலமாக இதைச் செய்யலாம். குழந்தைகளுக்குப் பல்வேறுவிதமான வாழ்க்கை முறைகளை அறிமுகப்படுத்த இது உதவும். ஆனால் வழக்கிலுள்ள கல்வி இவ்வாறு இல்லை. என்னுடைய பாடப்புத்தகத்திலே ‘கிணறு’ என்று இருக்கும். வட மாவட்டக் குழந்தைகள் இந்தச் சொல்லைக் கேட்டுத் திணறியிருப்பார்கள் என்பது இப்போது எனக்குத் தெரிகிறது. ஏனென்றால் அங்கே கேணி என்ற சொல்தான் உண்டு. கிணறு என்ற சொல் கிடையாது. மதுரை தாண்டி திண்டுக்கல் பக்கம் போகும்போது கிணறு, கேணி என்ற இரு சொற்களும் இருக்கின்றன. இரண்டிற்கும் நுட்பமான வேறுபாடு உண்டு. பொருள் வேறுபாடு இல்லாமல் ஒரு சொல் தோன்றாது. இந்த

வேறுபாட்டைக் குழந்தைகள் அறிவது அவசியம்.

இதை இப்படிச் செய்யலாம். பள்ளிக்கூடம் எந்த மாவட்டத்தில் உள்ளதோ அந்தப் பகுதிக்குரிய மொழியை முதலில் அறிமுகப் படுத்தலாம்; பிறகு பிற பகுதிகளுக்குரிய சொற்களைக் கற்பிக்கலாம். உதாரணமாக கோவை மாவட்டம் என்றால், பருத்தி, ஈரப்பதமுள்ள காற்று போன்றவற்றுடன் தொடர்புடைய சொற்களை அறிமுகப்படுத்திய பிறகுதான் அந்தக் குழந்தைக்கு மதுரைப் பக்கச் சொற்கள் பற்றிய அறிமுகம் வேண்டும்.

**வழக்காறுகளான, கதைகள், பாட்டுக்கள், விடுகதைகள், பழமொழிகள் மூலம் வேறுபட்ட அனுபவங்களையும் அவற்றுக்குரிய சொற்களையும் அறிமுகப்படுத்தலாமா?**

மொத்தத்தில் வட்டார வேறுபாடுகளை உள்ளடக்கிய ஒரு மொழிக்கல்வி அவசியம். ஏனென்றால் அந்த வட்டாரம் இல்லாமல் அந்த மனிதன் இல்லை. வட்டார வேறுபாடுகளை முற்றாக நிராகரிக்கும் பொதுமொழியைக் கற்கும் நிலைமை பள்ளிக் குழந்தைகளுக்கு வரக்கூடாது.

**வட்டார வழக்குகளில் சாதி அதிகாரமும் சமயக்கூறுகளும் பால்நிலை வேறுபாடுகளும் மிக இயல்பாக இடம் பெற்றிருக்கின்றனவே?**

நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அதிகாரம் சார்ந்து அல்லது சுரண்டல் சார்ந்து வருகின்ற சொற்களைக் கட்டாயம் அந்நியப்படுத்த வேண்டும். ஆனால் சாதி வழக்குகளில் இவை மட்டுமே இல்லை. தொழில்சார்ந்த அறிவும் அவற்றில் பொதிந்துள்ளது. குழந்தைகள் இந்த அறிவை மிக இயல்பாகவே தமதாக்கிக் கொள்கின்றனர். ஒரு தச்சர் வீட்டுக் குழந்தை படிக்க வரும்போது அந்தக் குழந்தைக்குத் தச்சுவேலை செய்கிற கருவிகளுடைய வகைப்பாடும் அவற்றினுடைய பெயர்களும் தெரிந்திருக்கும். இது சுத்தியல், இது ஆப்பு, இது ஆப்புக்கு வைக்கிற உளி, ஆப்புளி, இது கொட்டாப்புளி, இது இழைப்பு என்று இந்த மாதிரியான கருவிகளின் அறிமுகமும் அவற்றினுடைய பெயர்களின் அறிமுகமும் அவற்றினுடைய பயன்பாடும் அக்குழந்தைக்குத் தெரிந்திருக்கும். உழவர் வீட்டுக் குழந்தைக்கு உழவு சார்ந்த சொற்களும் அந்தக் கருவிகளின் பெயர்களும் தெரிந்திருக்கும். இவ்வாறாக உழைப்பு தொடர்பான, குழந்தைகள் ஏற்கெனவே பெற்றுள்ள சொல்தொகையை நாம் கைவிட வேண்டியதில்லை.

பால் வேறுபாடுகளைப் பொறுத்தவரை இவ்வேறுபாடுகள் காட்டாத சொற்களைத் தொடர்ந்து பயன்படுத்துவது அவசியம். பெண்கள் கல்லூரி முதல்வரை 'முதல்வர்' என்றுதான் சொல்கிறோம்.
தொடக்கத்திலேயே அந்தச் சொல்லைப் பழக்கத்திற்குக் கொண்டுவந்துவிட்டோம். ஏனென்றால் முதல்வி என்று சொன்னால், அது அவ்வளவு நன்றாக இல்லை. பேராசிரியை என்று
சொல்வதில் எனக்கே உடன்பாடில்லை. பேராசிரியர் என்று பால்காட்டாச் சொல்லாகத்தான் அதைப் பயன்படுத்த வேண்டும்.

**மொழிக்கல்வியில் வேறு சில பிரச்சினைகளும் உள்ளன. எடுத்துக் காட்டாக, குறிப்பிட்ட சமுதாயங்களுக்குரிய மொழியைக் 'கொச்சை' என்று சொல்லிப் புறந்தள்ளிவிடுகிறோம். அச்சமுதாயங்களைச் சேர்ந்த குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் பேசத்தயங்குவதையும் ஆசிரியர்கள் அவர்கள் பேசும் மொழியைப் பழிப்பதையும் கல்வி ஆய்வாளர்களில் சிலர் சுட்டிக் காட்டியுள்ளனர் . . .**

நம்முடைய பழைய இலக்கணங்களில் இவ்வாறு சொல்வதற்கான ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. தொல்காப்பியரை எடுத்துக்கொள்வோம். மொழிக்கு அதிகாரிகள் மக்கள் என்பதிலே ரொம்ப அழுத்தமான கருத்துடையவர் அவர். எடுத்துக்காட்டாக, பெயர்ச்சொற்களை வகைப்படுத்துகின்ற போது, ஓர் இடத்திலே சொல்கின்றார் 'கூடிவரும் வழக்கின் ஆடியற் பெயர்' என்கிறார். இது என்னவென்று கேட்டால், பிள்ளைகள் விளையாடுகின்றபோது அணிகளுக்குப் பெயர் இட்டுக்கொள்வார்கள் அல்லவா? இதையும் கணக்கிலே சேர்க்க வேண்டும் என்பது தொல்காப்பியர் கூற்று. நேரு அணி, காந்தி அணி, வள்ளுவர் அணி, எனப் பள்ளிக்கூடத்திலே பிரித்துக்காட்டுவார்கள் அது போன்றவற்றையும் கணக்கில்
எடுத்துக்கொள்ள வேண்டும் என்கிறார்.

தொல்காப்பியர் தெளிவாக, முதன்மை தர வேண்டியது
வழக்கு மொழிக்குத்தான், பேச்சு மொழிக்குத்தான் என்கிறார். எனவே மக்கள் மொழி என்பது அம்மக்களது சமுதாய நிலை என்னவாக இருந்தாலும் முதலானது. மேலும் பேச்சு மொழியிலிருந்துதான் எழுது மரபு கிடைத்தது. பேச்சு மொழியிலே ஓர் இலக்கணம் உண்டு. அந்த இலக்கணம்தான் எழுத்து மொழிக்குக் கொண்டு வரப்பட்டதே தவிர, எழுத்துமொழியின் இலக்கணம் பேச்சு மொழிக்குக் கொண்டு

போகப்படவில்லை. எனவே பேசுகிற மனிதனே மொழிக்கு அதிகாரி. ஆசிரியர்களோ இலக்கண ஆசிரியர்களோ அல்ல. இன்னும் சொல்லப்போனால், இலக்கண மரபு என்பது உங்களுடைய உடம்பிற்குள்ளாக, உங்களுடைய மூளைக்குள்ளாக இருக்கிறது. அதுதான் கொஞ்சம்
திருந்திய வடிவத்திலே எழுத்தில் இருக்கிறது.

**தொடர்ந்து மாற்றங்களுக்குள்ளாகும் பேச்சு மொழிதான் ஒரு மொழியின் வளர்ச்சிக்கு, பண்புக்கு ஆதாரமென்றால் இரண்டாயிரம் ஆண்டு பாரம்பரியமிக்க தமிழ்மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை எவ்வாறு புரிந்துகொள்வது?**

ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்பதே கிடையாது. ஒரு சொல்லுக்குக் காலம்தோறும் அனுபவம் சார்ந்து பொருள்கள் விரிவடைந்து கொண்டே வரும். இது ஒருபுறம்; மறுபுறமாகச் சொல்லை எந்தச் சூழலில் பயன்படுத்துகிறீர்களோ, அந்தச் சூழலில் அதற்குப் பொருள் வேறுபடும். ‘இந்தக் கடிதத்தை
இரண்டு படிகள் எடு’ என்று சொன்னால், ‘இரண்டு படி அரிசி அளந்து போடு’ என்று சொன்னால், ‘ஒழுங்காகப் படி’ என்று சொன்னால், படி என்ற ப்+அ+ட்+இ என்ற நான்கு ஒலிகளையும் சேர்த்துச் சூழலுக்குத் தகுந்தாற்போல அனுபவத்திற்குத் தகுந்தாற்போல பொருள் வேறுபாட்டை விரித்துக்கொண்டே வருகிறோம். தாய்மொழியைத் தன்னுணர்ச்சியோடு நாம் பயன்படுத்துவது இல்லை. அந்தத் தன்னுணர்ச்சியைப் பெற்றால் மொழிஅறிவு வரும். சொல்லுக்கான பொருள் மாறிக்கொண்டே வருவதற்கு ஓர் உதாரணம் சொல்லட்டுமா?

கறி என்ற சொல் இன்றைக்குப் பொதுவாக இறைச்சியைக் குறிக்கின்ற ஒரு சொல் – ஆட்டுக்கறி, மாட்டுக்கறி, கோழிக்கறி என்பதாக. ஆனால் கறி என்ற சொல்லுக்கு முதற் பொருள் மிளகு என்பதாகும். பிறகு மிளகை உரித்து வெள்ளை மிளகு செய்தபோது இதைக் கருங்கறி என்று சொன்னார்கள். அன்று உறைப்புக்காகப் பயன்படுத்தப்பட்ட பொருள் மிளகு என்பதனாலேயே கறியிட்டுச் செய்கின்ற பொருட்களெல்லாம் கறி என்று ஆகி வந்தன. பிறகு, குழம்புக்குக் கறி எனப் பெயர் வந்தது. “உங்க வீட்டுல இன்னிக்கு என்ன கறி?” என்று கேட்டால் “என்ன காயிட்டுக் குழம்பு?” என்று பொருள். பிறகு காயோடு சேர்த்துக் கறியும் இட்டுச் சமைப்பதினாலே அல்லது கறியோடு இட்டுக் காயையும் சமைப்பதினாலே

அதற்குக் காய்கறி என்று
பெயர் வந்தது. பிறகு துணையாக வைத்துக் கொள்ளக்கூடிய கூட்டுக்களையெல்லாம் தொடுகறி என்று முன்னடையிட்டுச் சொன்னார்கள்.

நீங்கள் மறந்துவிடக் கூடாது. இந்தக் காய்கறியிலே கீரை அடங்காது. ரசம் சேராது. எது காய்கறி என்பதற்கு ஒரு வரையறை இருக்கிறது. எங்கே காய் இருக்கிறதோ அதற்குத்தான் காய்கறி என்று பெயர். பிறகு மிளகிட்டுச் செய்யக்கூடிய அதிக உறைப்பு தேவைப்படுகிற புலால் உணவுக்குக் கறி என்ற பெயர் வருகிறது. அப்புறம் புலால் துண்டுகளுக்கே கறி என்ற பெயர் வருகிறது. காரணம் உறைப்புக்கு வேறு சொல் கிடைத்துவிட்டதுதான். உறைப்பிற்கான இன்னொரு தாவரம் பதின்மூன்றாம் நூற்றாண்டிலே வெளிநாடுகளிலிருந்து அறிமுகமாகிறது. அது மிளகு போல் இருந்ததனாலே, அதைக் காயவைத்து வற்றலாக்கித்தான் பயன்படுத்த முடியும் என்பதால், அதற்கு மிளகாய் வற்றல் என்றும் மிளகாய் என்றும் பெயரிட்டார்கள். அதை மிளகினுடைய மாற்று வடிவமாகக்
கொண்டார்கள். அதற்கு மிளகாய் என்றும் மிளகாய் வற்றல் என்றும் பிறந்த தேசத்திலே பெயர் இருக்க முடியாது. மிளகுபோல உறைப்புடையது, காயாக இருக்கிறது என்பதினாலே மிளகாய் என்று சொல்ல ஆரம்பித்தார்கள். இப்படித்தான் சொல்லும் பொருளும் அனுபவங்களும் மாறிக்கொண்டே வருகின்றன.

**இந்த மாற்றங்களுள் மொழிக்கலப்பும் அடங்கும் அல்லவா?**

மொழிக்கலப்புகளெல்லாம் ஒரே மாதிரியானவையல்ல. அரசதிகாரம் சார்ந்து, எழுத்திலக்கியம் சார்ந்து வந்த மொழிக்கலப்புகள் பெரும்பாலும் வடமொழி வழியாக வந்தவை. கிறிஸ்தவம் சார்ந்தும் இஸ்லாம் சார்ந்தும் வந்த மொழிக்கலப்புகள் மக்கள் தரப்பிலிருந்து வந்தவை. ‘குஷ்கா’ என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். புலால் சேர்ந்த நெய்ச்சோற்றுக்குக் குஷ்கா என்று பெயர். இது மக்கள் வழியாகப் பரவிய சொல். இன்றைக்கு குஷ்கா என்ற சொல் எல்லாருக்கும் தெரியும். பாளையங்கோட்டையில் ‘ஓசிசி’ என்றால் எல்லாருக்கும் தெரியும். இதற்கு அப்பம் என்று பொருள்; இது கிறிஸ்தவம் சார்ந்து வழங்குகின்றது. அதுபோல் சொல்லுக்குக் கலாச்சார ரீதியான சில முத்திரைகளும் உண்டு. ஆண்டவர் என்பதும் கர்த்தர் என்பதும் பொதுச் சொல்தான். ஆனாலும் இச்சொற்கள் கிறிஸ்தவப் பின்னணியோடு மட்டுமே அறியப்படுகின்றன; அது வாழ்தலின் அனுபவம். ஆண்டவர் என்ற சொல்லை இஸ்லாம் பாவிக்கும். உதாரணத்துக்கு நாகூர்

ஆண்டவர். கர்த்தர் என்றோ இறைவன் என்றோ இஸ்லாமியர்கள் வழக்கமாகச்
சொல்லமாட்டார்கள்.

இஸ்லாம் அதிகமாகப் பயன்படுத்துகிற மரியாதைக்குரிய சொல் ‘அப்பா’. ‘அவர்கள்’ என்பதற்குப் பதிலாக ‘அப்பா’ என்ற சொல்லைப் பயன்படுத்துவார்கள்; பீர் அப்பா; தக்கலை பீர் அப்பா. உமறுப் புலவரையே ‘உமர் அப்பா’ என்று எழுதுவார்கள். இது இந்த மொழிக்குள்ளிருந்து அவர்கள் எடுத்துக்கொண்ட சொல். அவர்களின் திருமணப் பத்திரிக்கையில் மணாளன், மணாளினி என்று இருக்கும். இதெல்லாம் இஸ்லாம், கிறிஸ்தவம் சார்ந்து வருகின்ற சொற்கள். இவை அவர்களே தங்கள் புதுசமயத்திற்காக ஆக்கிக் கொண்டவை. கோவில் என்பதற்கு மாற்றாக, தேவாலயம் என்ற சொல்லைக் கைக்கொண்டனர். அதேபோல் வழிபடும் இடத்தை இஸ்லாமியர்கள் ‘மஸ்ஜித்’ என்று சொல்லவில்லை. பள்ளிவாசல் என்ற சொல்லைக் கையாண்டனர். எல்லாப் பள்ளிவாசல்களிலும் குழந்தைக்கு ஐந்து கலிமாவையும் ஓதக் கற்றுக்கொடுக்கின்ற ஓர் ஆள் உட்கார்ந்து கொண்டிருப்பார். இதனால்தான் அதற்குப் ‘பள்ளி’ என்றே பெயர் வந்தது. கற்றுக்கொடுக்கிற இடம் பள்ளி. இது பழைய சமண
– பௌத்த மரபில் இருந்து வந்தது. இவை மக்கட் சமூகத்தின் அனுபவங்கள். இச்சொற்களிலெல்லாம் அதிகாரம் இல்லை. இவை போக அதிகாரம் சார்ந்த சொற்களும் தமிழுக்குள் வந்துள்ளன. தாசில்தார், கிஸ்தி என்பன எழுத்து மரபு சார்ந்து, அதிகாரம் சார்ந்து அரசாங்கத்தின் மூலமாக வருகின்ற சொற்கள் இதற்கு நல்ல எடுத்துக்காட்டுகள்.

**எனவே தூய தமிழ் என்று எதுவும் கிடையாது.**

மொழித் தூய்மை என்பது, எப்படி ஒருவனை அழுக்கான மனிதன் என்று புறந்தள்ளுகிறோமோ அப்படித்தான் தூய்மையற்ற மொழி என்று ஒரு மொழியைத் தள்ளுவதும்! மொழித் தூய்மை என்பது ஒலியிலே காட்ட வேண்டிய தூய்மையா? இலக்கண அமைப்பிலே காட்டப்பட வேண்டியதா அல்லது பிற மொழிச் சொற்களை ஏற்கிறபோது காட்ட வேண்டியதா? தூய்மைவாதம் ஓர் எல்லைக்கு மேலே பாசிசமாகத்தான் முடியும். அது இனத்தூய்மை வாதமாக இருந்தாலும் சரிதான். ஆகவே அந்தச் சொல்லை அப்படிச் சொல்லாமல் முடிந்த மட்டும், இயன்ற வரையிலும் தாய்மொழியில் சொல்வதே அறமாக இருக்கும்.

அதே சமயம் தாய்மொழியென்பது மாறாத தன்மையுடையதல்ல என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. புதிய வரவுகளை உள்வாங்கிக் கொள்வதாலேயே மொழி வளர்கிறது. நான் ஏற்கெனவே சொன்னது போல் தொல்காப்பியரே இதை ஆதரிக்கிறார். உரிச் சொற்களை எடுத்துக்கொள்வோம். தொல்காப்பியர் சொன்ன மிகுதியையுணர்த்தும் உரிச் சொற்கள் செத்துப்போய் விட்டன. வழக்கிலே ஒரே ஒரு சொல் மட்டும் மிஞ்சி இருக்கிறதாம். சில இடங்களிலே 'இளம்பிஞ்சு' என நாம் சொல்வதைத் 'தவப்பிஞ்சு' என்று சொல்கிறார்களாம். அந்த 'தவ' மட்டும் சில இடங்களிலே இருக்கிறது. ஆனால் புதுமாதிரியான இதே போன்ற சொற்கள் வந்திருக்கின்றன. 'செம' என்று பிள்ளைகள் ஒரு வார்த்தையைச் சொல்கிறார்கள். இந்த 'செம' என்பது 'சுமை' என்பதின் மாற்று வடிவம். சுமை என்பது மிகுதியை உணர்த்துவது; அது உரிச்சொல் அல்ல. ஆனால் இங்கு அது உரிச்சொல்லாகி விட்டது. 'தூள்' என்றொரு சொல்; 'படம் தூளாக இருந்தது' என்கிறான்; நன்றாக இருந்தது என்பதல்ல, இதன் பொருள் 'ரொம்ப ரொம்ப நன்றாக இருந்தது என்பதாகும் 'தூள்' நிகழ்காலத்திலே பிறந்திருக்கிற ஓர் உரிச் சொல். இவை போன்ற சொற்களை நமது மொழிக்குரியவையாக நாம் பாவிக்க வேண்டும். 'சூப்பர்' இந்தச் சொல்லை ஆங்கிலச் சொல்லாகக் கணக்கிலெடுக்கக் கூடாது. இதை ஒலித்திரளாக முன்வைத்து இது உணர்த்தும் பொருளை எடுத்துக்கொண்டால், இது மிகுதிப் பொருளை உணர்த்தும் ஓர் உரிச்சொல். அதைத்தான் நீங்கள் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். அதனால் 'மொழி மாறும் தன்மையுடையது. மாறுவதனால்தான் அது உயிரோடு இருக்கின்றது' என்பதை நாம் மொழிப்பாடத்துக்கான அடிப்படையாகக் கொள்ள வேண்டும்.

**குறிப்பிட்ட வேற்று மொழிச்சொல்லைத் தமிழ்ப்படுத்துவதைப் பற்றிச் சொல்லுங்களேன். உதாரணமாக, பென்சிலைக் 'கரித்துண்டு' சாவியைத் 'திறவுகோல்' சாக்பீசை 'சுண்ணாம்புக்கட்டி' என ஏன் சொல்ல வேண்டும்?**

பிறமொழிச் சொல்லுக்கான தமிழ்ச்சொல் குழந்தைக்குப் புரிகிறதா என்பதுதான் கேள்வி. 'திறவு' என்ற சொல் செயற்கையானது என்றாலும் குழந்தையால் புரிந்துகொள்ளமுடிகிறது. எப்படி யென்றால் 'கதவைத் திற' என்று வினைவடிவமாக நீங்கள் சொல்கிறபோதும் 'கோயில் நடை திறந்தாச்சா? என்று கேட்கும் போதும் 'திறத்தல்' என்கிற வினைவடிவத்தைக் குழந்தைக்கு அறிமுகம் செய்கிறீர்கள். எனவே

'திறப்பதற்குரியது' என்ற அளவிலே 'திறவு' என்ற பெயர்ச்சொல்லைக் குழந்தைகள் எளிதாகப் புரிந்துகொள்கிறார்கள். மேலும், கதவைத் திறக்க உதவுகிற அந்தச் சாவியினைக் குழந்தைகள் பார்த்திருப்பார்கள், பயன்படுத்தியிருக்கிறார்கள். எனவே, திறவு என்பதில் அவர்களுக்குச் சிக்கல் இல்லை. குழந்தைகளின் அனுபவ எல்லைக்கு உள்ளாக ஆங்கிலச் சொல்லிற்கு மாற்றாக ஒரு
புதுச்சொல்லைக் கற்றுக் கொடுப்பதில் சிக்கல் இல்லை.

சில சமயங்களில் புதிய அனுபவங்களை அறிமுகப்படுத்திப் புதுச் சொற்களைச் சொல்லிக்- கொடுக்க வேண்டியிருக்கும். காப்பிக்குக் 'குளம்பி' என்ற ஒரு சொல்லைக் கொடுக்கும்போது என்ன செய்ய வேண்டுமென்றால், 'குதிரையின் குளம்புபோல காப்பிக்கொட்டை இருக்கிறது பார்' என்று காப்பிக்கொட்டையை எடுத்துக் குழந்தைக்குக் காட்ட வேண்டும். பொருள் பற்றிய அனுபவத்தைக் கொஞ்சம் தள்ளிவைத்துவிட்டு, வெறும் ஒலிபற்றிய,
சொல்பற்றிய அனுபவங்களைக் குழந்தைகளுக்குக் கொடுக்கக் கூடாது. பொருள் பற்றிய அனுபவம் குழந்தைகளுக்கு வேண்டும்.

**தற்காலத் தமிழைப் பொறுத்தவரை வரலாற்று அனுபவங்கள் முக்கியமானவையாக இருந்துள்ளன. அதாவது தற்காலத் தமிழின் தன்மையை, உட்கூறுகளை மாற்றியமைத்த நிகழ்ச்சிப் போக்குகள் யாவை?**

தற்காலத் தமிழைப் பொறுத்த வரை திராவிட இயக்கத்தின் செயல்பாடுகள் முக்கியமானவை. காலங்காலமாகப் பேச்சுரிமை மறுக்கப்பட்டவர்கள் பேச வந்தார்கள். முதல்முறையாக எழுத்தைக் கற்றுக்கொண்டவர்கள் பேச வந்தார்கள். அவர்களுக்கு ஏற்கெனவே சொல்தொகுதி ரொம்ப அதிகம். காங்கிரஸ் இயக்கத்திலிருந்து கொண்டு தற்கால அரசியல் சூழலுக்குகந்த வகையில் தமிழைக் கையாண்டவர்களில் வரதராஜுலு நாயுடு, திரு.வி.க., பெரியார் ஆகியோர் முக்கியமானவர்கள். இதில் பெரியார் பேச்சு சற்று வேறுபட்டிருக்கும். ஏனென்றால் அவர் முறையான பள்ளிக் கல்வியோ இலக்கியக் கல்வியோ பெற்றவர் அல்லர். அவருக்குக் கடைசிவரைக்கும் 'காய்ச்சல்' என்று சொல்ல வராது. 'காயலா' என்றுதான் சொல்லுவார். அவருடைய எழுத்துமொழியிலே கூட 'காயலா' என்ற சொல்தான் இருக்கும்.
காய்ச்சல் என்ற சொல் இருக்காது.

அவரைப் பின்பற்றி வந்தவர்களில் பலர் மேலோர் மரபிலே பேசாமல், வழக்காறுகளைப் பயன்படுத்தினார்கள். இவர்களின் வழித்தோன்றல்களாக வந்து திராவிட முன்னேற்ற கழகத்தின் முன்னணிப் பேச்சாளர்களாகக் கருதப்பட்ட பலர் கதையில்லாமல், பழமொழிகளைக் கையாளாமல் பேசமாட்டார்கள். அவர்களுடைய பேச்சுகளில் வழக்குச் சொற்கள் நிறைய இருக்கும். எனவே வழக்குமொழிக்கான மரியாதை, பேச்சு மொழிக்கான மரியாதை, பேச்சு மொழி மட்டுமே அறிந்தவர்களுக்கான சமூக அங்கீகாரம் போன்றவை இவர்களுடைய மொழி மூலமாக வந்தது. விலக்கப்பட்ட சொற்கள் என்பனவற்றை ஒரு கலக மரபோடு பெரியார் உடைத்தார். அந்தக் கலக மரபு அவருக்குப் பின்னால் வந்த எல்லோரிடமும் இல்லை; என்றாலும் கூட அதுவரையிலே மேடையில் விலக்கப்பட்ட சொற்களை இவர்களால்தான்
சொல்ல முடிந்தது.

ஒருவிதத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே இந்தப் போக்கு தொடங்கிவிட்டதாகச் சொல்லலாம். உதாரணத்துக்கு ‘ஒழிக’ என்ற சொல்லை வள்ளலார் கவிதையிலே பயன்படுத்துகிறார்.
‘கருணையிலா ஆட்சி கடிந்து ஒழிக’ என்கிறார். வள்ளலார் காலத்துக்குப் பின்னால் ஏற்பட்ட சமூக, அரசியல் மாற்றங்களின் விளைவாகத் தோன்றிய திராவிட இயக்கம் இத்தகைய போக்கை எதிரொலித்தது. அவ்வியக்கம் ஏற்படுத்திய வழக்குமொழிக்கான அங்கீகாரம் அது சாதித்த அதிகார மாற்றத்திற்கு அடிகோலியது.

**ஆனால், இந்தப் பாரதூரமான மாற்றமானது பாடநூல்களில் எதிரொலித்ததாகத் தெரியவில்லை.**

இல்லை. காரணம், பாடநூல்கள் எல்லாம் வெள்ளைக்காரன் ஆட்சியிலேயே நிலைபெற்றுவிட்டன. ஒருவித உறைநிலைக்கு வந்துவிட்டன. அதற்குப் பிறகு பாடத்திட்டத்திலே வந்த மொழிமாற்றம் மிகக் குறைவு. சொல்லப்போனால் திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் ‘களையெடுப்பு’ என்பதைப் பற்றியே அதிகம் சிந்தித்தார்கள். பயிர்வளர்ப்பைப் பற்றிப் பேசவில்லை. களையெடுப்பு என்பது பயிர் வளர்ப்பின் ஓர் அம்சம்தானே தவிர, பயிர் வளர்ப்பதன் மற்ற அம்சங்களைப் பற்றி அவர்கள் யோசிக்கவில்லை. ஏனென்றால் அவர்களின் நோக்கம் அரசியல் அதிகாரம்.

**இன்றைய சூழலுக்குரிய மொழிக்கல்வி எப்படி இருக்க வேண்டும். என்று நினைக்கிறீர்கள்.**

சமூகச் சூழலோடு இணைந்த மொழிக்கல்வி நமக்குத் தேவை. சூழல் என்பதைக் கருப்பொருள், உரிப்பொருளுடன் இணைத்துப் பார்க்க வேண்டும். சூழல் என்றாலே நாம் ஏற்றத்தாழ்வான சாதிய, வர்க்க சூழலைத்தான் நினைவுகொள்கிறோம். ஆனால் கரு உரிப்பொருள் சார்ந்த அனுபவங்கள் குறிப்பிட்ட சூழலுக்கான தன்மையை வழங்குகின்றனவே தவிர அதில் சாதி இல்லை. சங்கரன்கோயில் சார்ந்த எல்லாரும் தினைப்பயிரைப் பார்த்திருப்பார்கள். அது எப்படியிருக்கும் என்று திருநெல்வேலி ஆளுக்குத் தெரியாமல் இருக்கலாம். போத்திராஜா என்றால் இங்கு இருப்போர்க்குத் தெரியாது. ஆனால் இதைக் கேட்டவுடனே திருவண்ணாமலை மாவட்டக் குழந்தைகளுக்கு அந்தப் பெரிய வயிறும் அந்த உருவமும் நினைவுக்கு வருகிறதில்லையா? இங்கே சுடலைமாடன் என்றால்தான் தெரியும்.

நிலவியல் அமைப்பும், உயிரும் பயிரும் இவற்றோடு தொடர்புடைய பண்பாடும்தான் சூழலை உருவாக்குகின்றன. இவற்றுடன் இணைக்கப்பட்ட மொழிக்கல்வி நமக்குத் தேவை. வட்டார ரீதியாக இதை உருவாக்கலாம்; அல்லது வட்டார வழக்குகளின் தன்மையுடன் கூடிய பொதுமொழியைக் கொண்டு இதைச் செய்யலாம்.

**‘பிள்ளைத்தமிழ்’ நூலில் இடம்பெற்றது**
**சந்திப்பு: வ.கீதா, கோ.பழனி**